# நிரந்தரச் செல்வம்

ராஜாஜி







# பதிப்புரை

ஒளிச் சிறப்பும் உயர் மதிப்பும் வாய்ந்த ரத்தினக் கற்கள் போன்றவை ராஜரிஷி ராஜாஜி அவர்களின் சிறுகதைகள். கருத்தும் பயனும் நிறைந்து விளங்கும் இந்தச் சிறுகதைத் தொகுப்புக்கு நிரந்தரச் செல்வம் என்றபெயரே வெகுபொருத்தமாக அமைந்திருக்கிறது.

இந்தக் கதைகளைப் புதிய பதிப்பாக வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சியடைகிறோம்; பெருமிதம் கொள்கிறோம்.

எதையும் மனத்தில் கோலமாகப் பதியும் வண்ணமாகவும் நேரிடையாகவும் சொல்வதில் ராஜாஜி அவர்கள் பண்டை முனிவர்களைப்போல் உயர்ந்து நிற்பது உலகறிந்த உண்மை. எத்தனை பெரிய பளுவாக இருந்தாலும் உருளை வண்டியில் வைத்துச் சுலபமாக உருட்டிக்கொண்டு போவதுபோல், மிகப் பெரிய கருத்துக்களையெல்லாம் வெகு லாகவமாகப் பழகு நடையில் எளிமையாய்ச் சொல்லிவிடுகிற அழகை ஒவ்வொரு கதையிலும் காணலாம்.

ஒவ்வோர் இல்லத்திலும் 'நிரந்தரச் செல்வம்' நிலையாக இருக்க வேண்டுமென்று விழைகிறோம்.

நாட்டுக்குத் தம் வாழ்வையே அர்ப்பணித்திருக்கும் மகான் ராஜாஜி அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஏ. திருநாவுக்கரசு,
வானதி பதிப்பகம்

# பொருளடக்கம்




# நிரந்தரச் செல்வம்

பிரஸிடென்ஸி மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டு. மேடை மேல் இரண்டு நீதிபதிகள். ஒருவர் உத்தி யோகஸ்தர்; மற்றொருவர் இலவசமாக உட்கார்ந்து உதவுகிறவர். கீழே நாற்காலிகளில் சில வக்கீல் களும் போலீஸ் உத்தியோகஸ்தர்களும். குற்ற வாளிக் கூண்டில் ஒரு பையன்.

"உன் தகப்பனார் பெயர் என்ன?"

"எனக்குத் தகப்பனார் இல்லேங்கோ" என்றான் சிறு பையன்.

"எப்போது இறந்து போனார்?" என்று கௌரவ மாஜிஸ்ட்ரேட் தம் நெகிழ்ந்த மனப்பான்மையைக் காட்டினார்.

"இறந்து போகவில்லேங்கோ. தகப்பனாரே இல்லேங்கோ எனக்கு" என்றான் பையன்.

கோர்ட்டார் இருவரும் சிரித்தார்கள்.

"உன் வயது என்ன?" என்று குமாஸ்தா கேட்டு எழுத ஆரம்பித்தார்.

"பத்து வயதுங்கோ."

"பெயர் ?"

"ஓவர்ஸ் கண்ணன்."

"ஓவர்ஸ் என்ருல் என்ன ?"

"அப்படித்தான் எல்லாரும் என்னைக் கூப்பிடுருங்க."

"ஏன் அந்தப் பெயர் உனக்கு இட்டார்கள். தெரியுமா ?" என்று இலவச மாஜிஸ்ட்ரேட் மறுபடியும் குறுக்கிட்டார்.

"எங்க அம்மாவுக்கு — இல்லேங்கோ, என்னை வளர்ந்த தாய்க்கு — ஒரு சொந்த மகனும் இன்ஞெரு வளர்த்த மகனும் இருந்தாங்க. இருவரும் என்னை விடப் பெரியவங்க. அவர்கள் பெயரும் கண்ணன் — பெரிய கண்ணன், சின்னக் கண்ணன். அவர்களை நான் கவனித்து வந்ததால் என்னை மேஸ்திரி கண்ணன் என்று அழைத்து வந்தாள். பெரிய கண்ணனுக்கு இது பிடிக்கவில்லை. அவன் அழுதான். அவன் சொந்தப் பிள்ளை."

"அவன் சொந்தப் பிள்ளை என்பது உனக்கு எப்படித் தெரியும்?" என்ருர் இலவச மாஜிஸ்ட்ரேட்.

"அவன் சொல்வதைச் சொல்லட்டும். குறுக்கிடாதீர்" என்ருர் உத்தியோக மாஜிஸ்ட்ரேட் மெதுவாக, ஆனல் உறுதியான சுவரத்தில்.

"மன்னிக்க வேண்டும்" என்று இலவசர் நாற்காலியைப் பின்ஞலே தள்ளிச் சாய்ந்தார்.

"பெரிய கண்ணன் நான்தான் மேஸ்திரி என்று சண்டை போட்டான். இதற்காக அவனையே

மேஸ்திரி கண்ணன் என்று ஒப்புக்கொண்டு, நீ ஓவர்ஸ் கண்ணன்' என்று எனக்குச் சொல்லி அப்படியே கூப்பிட்டு வந்தார்கள்'' என்ருன் அவன்.

"ஓவர்ஸீயரா நீ, ஓஹோ!" என்று மாஜிஸ்ட்ரேட்டு சிரித்து, கொஞ்சம் கோபமாக உட்கார்ந்திருந்த கௌரவ மாஜிஸ்ட்ரேட்டைப் பார்த்து அவரையும் சிரிக்கச் செய்தார்.

"இன்னொருவனுக்கு என்ன பெயர் வைத்தாள்?" என்று கேட்டார்.

"அவனுக்கு ஒரு பெயரும் வைக்கவில்லே. அவன் அழவில்லே. அவன் ரொம்ப சாது."

"நீ போக்கிரியா?"

"இல்லேங்கோ, நான் சாது."

"சரி! நீ மயிலாப்பூர் உற்சவத்தில் ஏன் திருட்டு வேலே செய்தாய்?"

"இல்லேங்கோ! பிச்சைதான் கேட்டேன், திருடவில்லேங்கோ."

"சமயம் வந்தால் திருடுவதும் உண்டல்லவா?" என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் மெதுவாகச் சொன்னர்.

கௌரவ மாஜிஸ்ட்ரேட் சிரித்தார். பையனும் சிரித்தான். கோர்ட்டிலிருந்த எல்லாரும் சிரித்தார்கள். பையனேப் பார்த்துப் பரிதாபப்பட்டார்கள். அவன் சிரித்தபோது அவன் முகத்தில் ஒரு விலாசம் பிரகாசித்து எல்லாருடைய மனத்தையும் கவர்ந்தது.

"முகம் நல்ல லட்சணமாக இருக்கிறது. பார், யாரோ நல்ல ஜாதிக்காரன் இவனைப் பெற்றிருக்க வேண்டும்!" என்றார் ஒரு வக்கீல்.

"யாரோ உயர்குலத்து ஸ்திரீ கெட்டுப்போய் இவனைப் பெற்று விட்டாள் போலிருக்கிறது. நயினா புரத்தில் பலபேர் இப்படிப் பிறந்த குழந்தைகளை வாங்கிக் கொண்டு ஜீவனம் செய்து வருகிறார்கள். குழந்தைகளெல்லாம் அழகாக இருப்பார்கள்" என்றார் இன்னொரு வக்கீல்.

"அப்படித்தான் திருட்டுப் பையன்கள் சென்னைப் பட்டணத்தில் உண்டாகிறது" என்றார் மற்றொருவர்.

* * *

"ஏய், கண்ணா! சொல்வதைக் கேள். மறுபடியும் திருடமாட்டேன் என்று சொன்னால் இந்தத் தடவை விட்டுவிடுகிறோம். சரியாக நடந்து கொள்வாயா?" என்றார் மாஜிஸ்ட்ரேட்.

"அப்படியே செய்கிறேனுங்கோ" என்றான் பையன்.

"கூட்டத்திலே ஜோபியில் கைவைக்க மாட்டாயே?" என்றார் இலவசர்.

"இல்லேங்கோ, பிச்சையே எடுப்பேன்" என்றான் ஓவர்ஸ் கண்ணன்.

"இன்ஸ்பெக்டர்வாள்! என்ன சொல்கிறீர்கள்?"

"கோர்ட்டார் இஷ்டம். இவன் துஷ்டன். ஓவர்ஸீயர் என்று அவனே ஒப்புக் கொள்கிருன்" என்ருர் இன்ஸ்பெக்டர்.

"இல்லேங்கோ, நான் திருடனல்ல. ஓவர்ஸ் என்பது என் தாய் வைத்த பெயர்" என்ருன் பையன்.

ஏதோ கடுதாசிகளேப் புரட்டிப் பார்த்தார். பிறகு, "சாட்சி உண்டா?" என்று கேட்டார் மாஜிஸ்ட்ரேட், இன்ஸ்பெக்டரைப் பார்த்து.

இன்ஸ்பெக்டரும் அவருடைய உதவி உத்தியோகஸ்தர்களும் பேசிக்கொண்டார்கள். பிறகு "கோர்ட்டார் யோசனேப்படி சிறுவனே விடுதலே செய்துவிடுங்கள்" என்ருர் இன்ஸ்பெக்டர்.

## 2

எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனண்டை மேஸ்திரி கண்ணன் காத்துக் கொண்டிருந்தான். ஓவர்ஸ் கண்ணன் அங்கு ஓடி வந்ததும், "நான் சொன்னேனு இல்லேயா, உன்னே ஒன்றும் செய்ய மாட்டார்களென்று?" என்ருன்.

இவர்களே வளர்த்த தாய் காலரா கண்டு இறந்து போய் எட்டு வருஷமாச்சு. அனுதையாக இருந்த இந்தக் குழந்தைகள் அவள் இறந்துபோன பின் சுத்த அனுதையாகிப் பிச்சை எடுத்தும், தெருவில் கெஞ்சித் திரிந்தும் எப்படியோ வளர்ந்து வந்தார்கள்.

இவர்களும் இன்னும் சில திக்கற்ற பையன்களும் பகலெல்லாம் தெருக்களில் காலம் கழித்து இரவில் நயினுபுரம் கண்ணுடிப் பட்டறையண்டை சாம்பல் மேட்டில் படுத்துத் தூங்குவார்கள்.

கச்சேரி நடவடிக்கைக்குப் பிறகு இரண்டு மூன்று நாள் ஓவர்ஸ் கண்ணன் திருட்டு வேலைகளில் சேர வில்லை. பிறகு குப்பாண்டி — இவனைவிட நான்கு வயது பெரியவன் —"வாடா ஓவர்ஸ், ஏன் பயந்து சாகிருய்?" என்ருன்.

"எனக்குப் பயம் கிடையாது. நீதான் பயங் காளி!" என்ருன் ஓவர்ஸ்.

சீனு பஜாரிலும், மூர் மார்க்கெட்டிலும் கொத்த வால் சாவடியிலும் இரண்டு மூன்று நாட்கள் சமயம் பார்த்தவர்களாக இருந்தார்கள்.

ஒன்றும் கிடைக்கவில்லை.

"எல்லாரும் திருட்டுப் பயல்களாகப் போனுர் கள். எப்போதும் ஜோபியில் கையைப் பத்திரமாக வைத்துக்கொண்டே இருக்கிருர்கள். முந்தியெல் லாம் இப்படியில்லை" என்ருன் குப்பாண்டி.

நம்முடைய சாஸ்திரத்தில் குப்பாண்டி திருடன். திருடர்களுடைய சாஸ்திரத்தில் நாம் திருடர்கள்.

ஓவர்ஸ் கண்ணன் எட்டு வருஷம் இந்த விருத்தி யில் இருந்தான். பிறகு அவனை யாரோ ஏமாற்றிக் கூலிக் கப்பலில் ஏற்றிக்கொண்டு போனுர்கள். பினுங்கில் ரப்பர் தோட்டத்தில் அமர்ந்தான்.

அங்கே மிகவும் சாமர்த்தியமாகவும் நம்பிக்கையாக வும் வேலை செய்து பணம் சம்பாதித்து விட்டான். இந்தியா திரும்பி வந்தபோது அவனுக்கு நாற்பது வயது. மூன்று பெண்ஜாதிகளோடு திரும்பி வந் தான். இப்போது பெரிய புகையிலை வியாபாரியாக நல்ல முறையில் வாழ்க்கை நடத்தி வருகிறான். எட்டு ஆண் மக்களும் இரண்டு பெண்களும் மூன்று மனைவிமார்களும் சண்டை சச்சரவு இன்றிக் கௌரவமாகவும் சாமர்த்தியமாகவும் குடும்பம் நடத்தி வருகிறார்கள். கடைசிப் பெண் தவிர மற்ற வர்கள் எல்லாரும் புகையிலைக் கிடங்கில் கூலிக் காரர்களாக வேலை செய்து வருகிறார்கள். பெராக்கு ராம முதலியார் — அதுதான் இப்போது ஓவர்ஸ் கண்ணனுடைய பெயர் — நல்ல தமிழ் எழுத்தா ளராகிவிட்டார். அவர் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டது பினனங்கில், இருபத்து நான்கு வயதுக்கு மேல், "என் கதை" என்று தம்முடைய வாழ்க்கை வரலாற்றை எழுதியிருக்கிறார். இனிமேல் தம் முடைய கதையை அவரே சொல்லுகிறார்.

மந்தைவெளி குப்பாண்டி ஒரு கிழவனார் ஜேபியி லிருந்து பணப்பையை எடுத்துவிட்டு, டிராம் வண்டி ஓரமாகப் பின்புறம் சென்றான். மெள்ளக் கீழே பையைப் போட்டுவிட்டுப் பேசாமல் சென் றான். பக்கிரி ஓட ஆரம்பித்தான். "பை போச்சு! பிடி திருடனை!" என்று சத்தம் கிளம்பிற்று. உடனே ஓடிக் கொண்டிருந்த பக்கிரியைத் துரத்திக் கொண்டு சிலர் போய் அவனைப் பிடித்து நன்றாகப் புடைத்தார் கள். தெருவில் எதிர்ப் பக்கத்தில் பேசாமல் நின்ற

என்னை யாரும் கவனிக்கவில்லை. கீழே போட்ட பையை மெள்ள எடுத்துக் கொண்டு கோவணத் துக்குள் வைத்துக் கொண்டேன். எல்லாரும் அடி படும் பையனைச் சுற்றிக்கொண்டார்கள். நானும் கூட்டத்தோடு ஒருவனாக நின்றேன். பிடிபட்ட பையன் கூவென்று அழுதான். அடிப்பட்டபடியால் இயற்கையாகவே பலமாகக் கத்தி அழுதான். அவன் உடுப்பை உதறி உதறிச் சோதனை போட்டார்கள். ஒன்றும் கிடைக்கவில்லை. "பாவம், விட்டு விடுங்கள். இவனல்ல திருடியது. திருடின ஆசாமி உங்களிடம் சிக்குவானா?" என்றாள் ஒரு கூடைக்காரி.

நானும் பேச்சில் கலந்துகொண்டு, "போக்கிரிப் பயல் இவன். திருடிவிட்டுக் கூட்டாளி கையில் கொடுத்துவிட்டிருக்க வேண்டும்" என்றேன்.

கூட்டம் கலைந்துவிட்டது. பையை இழந்தவரும் துயரத்தோடு தம் சிநேகிதருடன் பேசிக்கொண்டு திரும்பிப் போனார். "இந்தச் சென்னைப்பட்டணம் பொல்லாத ஊர். அதிலும் சைனா பஜாரில் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். பையில் எவ்வளவு பணம் இருந்தது" என்றார் சிநேகிதர். இப்படிப் பேசிக்கொண்டு போய் விட்டார்கள்.

தோட்டத்தில் ஒரு மூலையில் குப்பாண்டியும், பக்கிரியும், நானும் முன் செய்து கொண்டிருந்த ஏற்பாட்டின்படி கூடினோம்.

குப்பாண்டி ரொம்ப யோக்கியமாக நடந்து கொண்டான். பையில் பதினெட்டு வெள்ளி ரூபாயும் ஒன்றே கால் ரூபாய்ச் சில்லறையும் இருந்தது.

இதை மூன்று பங்காகச் செய்தான். ஆறு வெள்ளி ரூபாய் தன் பங்குக்கு வைத்துக்கொண்டான். பக்கிரிக்கு ஆறு வெள்ளி ரூபாய் கொடுத்தான். என் பங்குக்கென்று ஆறு ரூபாய் கீழே வைத்துவிட்டு, சில்லறை அணுக்களில் பத்தணுவைப் பக்கிரிக்கு, "நீ உதைபட்டதற்குக் கூலி" என்று கொடுத்தான். பிறகு எனக்கென்று வைத்திருந்த பங்கிலிருந்து குப்பாண்டி இரண்டு ரூபாய் எடுத்துக்கொண்டு, "நான்தான், முதலாளி ஜோபியில் கைபோட்டது நான்தானே? இதுதான் முதல் தடவை, நீ பெரிய வேலையில் கலந்தது. எனக்கு இந்த இரண்டு ரூபாய் நீ குருதட்சிணை கொடுத்துவிடவேண்டும்" என்முன்.

"சரி. அப்படியே எடுத்துக்கொள்" என்றேன். நான் வெகு சந்தோஷமாக என் பணத்தை எடுத்துக்கொண்டு ஓடினேன்.

## 3

அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை சாம்பல் மேட்டில் வழக்கப்படி படுத்தேன். பணம் உறுத்திக்கொண்டேயிருந்தது. கூடப் படுத்திருந்த பையன்களுக்குத் தெரிந்து விட்டால் உதைத்துப் பிடுங்கிக்கொண்டு விடுவார்கள் என்று பயம். கவலையும் சிந்தனையும் திகிலுமாக இரவு முழுதும் தூக்கமில்லாமல் கழித்தேன்.

அதுவரையில் சுகமாக இருந்த என்னை இப்போது கவலை ஆட்கொண்டுவிட்டது! பழக்கடை

யில் பசி என்ருல் மீசை மாரியாப் பிள்ளை ஒரு பழம் தருவார். கொஞ்சம் அதிகம் பழுத்ததாக இருக்கும். 'இந்தா!' என்று கையில் கொடுப்பார். மற்றவர் களைப் போல் வீசி எறியமாட்டார். வாழைப் பழம் கொஞ்சம் அழுகிஞல் ருசி அதிகம். பிஞங்கில் கூட அவ்வளவு நேர்த்தியான வாழைப்பழம் கிடையாது. அங்கப்ப நாய்க்கன் தெருவில் ஓட்டல்கார ஐயா மிஞ்சின சோறும் குழம்பு வண்டலும் கலந்து—எனக்காக ஒரு இஞமல் தட்டு வைத்திருப்பார்—அதில் 'இந்தா ஓவர்ஸீர்' என்று கொடுப்பார். மண்ணடியில் இரும்புக் கடைக்கார சாமி செட்டியார் மத்தியானம் வீட்டுக்குச் சாப்பிடப் போகும் போது, 'கடையைப் பார்த்துக்கொள், கண்ணு'! என்று கடை முழுதும் என் சுவாதீனத்தில் வைத்து விட்டுப் போவார். திருட்டுப் பயல்கள் யுாரும் நெருங்காமல் அவர் வரும் வரையில் நான் தெருவில் இருந்துகொண்டு காவலிருப்பேன். திரும்பி வந்ததும் செட்டியார் அரையணு வீசிப் போட்டு 'தோசை வாங்கிச் சாப்பிடு' என்பார். மண்ணடி மூலையில் கிழவி வார்க்கும் தோசைக்குச் சமானம் எந்த ஊரிலும் கிடையாது.

இந்தப் பணம் எனக்கு வேண்டாத ஒரு பெரும் பாரமாகப் பட்டது. உலகமெல்லாம் பணம், பணம் என்று வாயைத் திறந்து கிடக்க, எனக்கு வந்த இந்தப் பணம் அருவருப்புத் தந்தது. அதை நினைத்தால் இப்போது சிரிப்பாக இருக்கிறது. ஆஞல் அப்போது என்னை வாட்டின கவலையும் பயமும் தாங்க முடியாமலிருந்தது. வைத்துக் கொள்ளப் பையில்லை

பெட்டியில்லை, ஜோபியுள்ள ஒரு சொக்காயுமில்லை. கால் சட்டையுமில்லை. யாரிடமும் சொல்லிக் கொள்ளவும் முடியவில்லை. வேண்டாம் என்று எறிந்துவிடவும் முடியவில்லை. கடைக்காரர் யாரிடமாவது 'வைத்திரு' என்று சொன்னால் உடனே, 'திருட்டுப் பயலே' என்று பணத்தைப் பிடுங்கிக் கொண்டு என்னை விரட்டிவிடுவார்கள். அல்லது போலீசுக்குச் சொல்லிக் கூண்டில் அடைத்துவிடுவார்கள்.

இவ்வாறு சிந்தனையில் மூழ்கி, பணக்காரனை நான் மறுநாள் இரவும் தூங்காமலே கழித்தேன்.

என்னையும் மீறி, கொஞ்ச நேரம் தூக்கம் வந்தது. உடனே யாரோ என்னை அமுக்கிப் பணத்தைப் பிடுங்கப் பார்த்ததாகக் கனவு கண்டு திடீர் என்று விழித்துக்கொண்டேன். பிறகு கனவுதானே என்று கண்ணைத்தேய்த்துக் கொண்டு கொஞ்சம் சந்தோஷம் அடைந்தேன்.

அதற்குமுன் ஒரு இரவாவது நான் தூக்கமில்லாமலிருந்ததில்லை. எந்தக் கட்டாந்தரையிலும் படுத்துத் தூங்கிப் போவேன். இந்தப் பண முடிப்பு வந்து என் சுக வாழ்வைக் கெடுத்து விட்டது. தூக்கத்தில் பேசிவிடுவேன். பக்கத்தில் தூங்கும் முரட்டுப் பயல்கள் என்னிடம் ரூபாய் இருக்கிறது என்று கண்டுகொண்டு என்னைக் கொன்றுவிடுவார்கள் என்று பெருந் திகில் பிடித்துக் கொண்டது.

இவ்வாறு இரண்டாம் நாள் இரவும் கழித்தேன். விடிவதற்கு முன் அதிகாலையில் எழுந்து தெற்குப்

புறமாகத் தனியாகச் சென்றேன். நுங்கம்பாக்கத்தில் ஒரு மூலையில் இருட்டில் உட்கார்ந்து விம்மி விம்மி அழுதேன். என்னை வளர்த்த தாயை நினைத்துக்கொண்டு. அழுதபின் ஒருவித ஆறுதல் உண்டாயிற்று. மறுபடியும் எழுந்து நடந்து சென்றேன்.

அன்று பகலெல்லாம் இங்குமங்கும் திரிந்து பொந்துள்ள மரம் எங்கேயாவது தனிமையான இடத்தில் இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டே கழித்தேன். பழைய மாம்பலத்தில் ஒதுக்கமான இடத்தில் தகுந்த மரம் ஒன்று கண்டேன். சாயங்காலம் அங்கே போனேன். யாரும் ஆட்கள் பக்கத்தில் இல்லை. மரத்தின் மேல் ஏறினேன். பொந்து ஒன்றைக் கண்டேன் உள்ளே கை வைத்துப் பார்த்தேன். நன்ருகக் கை சென்றது. முழங்கை வரையில் நுழைந்தது. உள்ளே மெத்தென்று இருந்தது. இது பத்திரமாக இருக்கும் என்று தீர்மானித்தேன். ஒரு சொந்த வீடு கட்டிவிட்ட சந்தோஷத்தை அப்போது அடைந்தேன்! என் பண முடிப்பை அதில் வைத்துவிட்டுக் கீழே இறங்கினேன்.

பிறகு அங்கே கிடந்த செங்கற்துண்டு ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு மறுபடியும் ஏறினேன். கீரிப்பிள்ளை அல்லது வேறு ஜந்து நோண்டிக் கெடுத்துவிடாமலிருக்கும் என்று எண்ணிச் செங்கற் துண்டை அந்தப் பொந்தில் முடிப்புக்கு மேல் அமையும்படி வைத்தேன். அந்தச் செங்கற் துண்டு என் கையிலிருந்து நழுவி உள்ளே பட்டென்று விழுந்தது. மறுபடி கையை நுழைத்துப் பார்த்ததில் செங்கலும் இல்லை. பணமும் இல்லை! தோள்வரை கையைச்

செலுத்திப் பார்த்தேன். வெறும் பொந்தாக இருந்தது. முடிவில் பணத்தை இழந்துவிட்டேன். அப்போது உண்டான என் துயரத்தை எழுத முடியாது. பைத்தியக்காரன் மாதிரி கையை உள்ளே நுழைத்து நோண்டி நோண்டிப் பார்த்தேன். வெறும் பொந்துதான். ஒன்றும் கிடைக்கவில்லை. "போச்சு என் ஆஸ்தி" என்று நிச்சயம் செய்து கொண்டேன்.

கண்களினின்று பல பலவென்று நீர் வடிந்தது தலை கிறு கிறு என்று சுற்றிற்று, கீழே விழுந்தேன் பிறகு நினைவு வந்து அங்கேயே கொஞ்ச நேரம் உட்கார்ந்தேன். என் சொத்தைத் தின்றுவிட்ட மரத்தை மேலும் கீழுமாக வெறுப்புடன் பார்த்தேன். நான் ஏறின பக்கத்துக்கு எதிர்ப் பக்கமாக இப்போது உட்கார்ந்திருந்தேன். மரத்தில் இன்னும் சில பெரிய பொந்துகள் இருப்பதைக் கண்டேன். ஒரு வேளை என் பண முடிப்பு கீழே இருக்கும் பொந்துகள் ஒன்றில் விழுந்து கிடக்கும் என்று ஒரு எண்ணம் உண்டாயிற்று.

மறுபடியும் ஆசையோடு மரத்தில் ஏறினேன். நான் முடிப்பை வைத்த பொந்துக்குக் கீழே எதிர்ப் பக்கத்தில் ஒரு பொந்து இருந்தது. அதில் பார்க்க செங்கற் துண்டு தெரிந்தது. கை வைத்ததும் என் முடிச்சு சிக்கிற்று. அப்போது என் ஆனந்தத்தை என்னென்று சொல்லுவேன்! குரங்கைப் போல் குதித்துக் கூத்தாடினேன். இரண்டு இரவு எவ்வளவு கவலையும் பயமும் பட்டேனே அந்த அளவுக்கு மேல் இப்போது ஆனந்தக் களிப்பு அடைந்தேன்.

முடிப்பை அவிழ்த்து அதிலிருந்து ஒரு அணு எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு மிகுதியை மறுபடியும் கோவணத்தில் வைத்துக்கட்டிக்கொண்டு ஊருக்குள் சென்றேன். ஒரு அணுவுக்கு இடியாப்பம் வாங்கி வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டு, குழாயில் தண்ணீர் குடித்துவிட்டு மூர் மார்க்கட்டுக்கு வேக மாய்ப் போனேன். அங்கே பழஞ் சொக்காய்களும் வேறு பழஞ் சாமான்களும் வைத்திருக்கும் கடை யண்டை நின்றேன்.

"திருட்டுப் பயல்களுக்கு இங்கே என்ன வேலை? உதை வேண்டுமா?" என்றார் கடைக்காரர்.

இவ்வாறு மிரட்டியது மல்லாமல் கடையி லிருந்து இறங்கிப் பளீர் என்று என் கன்னத்தில் ஒரு அறையும் கொடுத்தார்.

"அனுதைக் குழந்தையை ஏன் அடிக் கிறேங்கோ?" என்று கடையின் மேலேயிருந்த அவர் மனைவியம்மாள் குறுக்கிட்டாள்.

"அனுதையாவது, குழந்தையாவது! கேப்மாரி திருட்டுப் பயல்கள். கடையைச் சரியாகப் பார்த்துக் கொள்" என்று மனைவிக்குச் சொல்லிவிட்டுச் செட்டி யார் வீட்டுக்குப் போய்விட்டார்.

நான் அங்கே நின்றேன்.

"குழந்தாய், உனக்கு என்ன வேண்டும்? ஏன் கடையண்டை நிற்கிருய்? உனக்கு வயதாய் விட்டது. கால் சட்டை போட்டுக்கொள்!" என்ருள்.

நான் பதில் சொல்லாமல் ஒரு மூலைக்குப் போனேன். முடிப்பிலிருந்து ஒரு ரூபாய் கையில்

எடுத்துக்கொண்டு மறுபடி முடிப்பை வைத்துக் கட்டிக்கொண்டு கடையண்டை திரும்பச் சென்று, "அம்மா" என்றேன்,

"என்ன, கண்மணி!" என்ருள் கடைக்காரம்மா.

"எனக்கு ஒரு சின்னக் கால் சட்டை கொடுங்கோ ஜோபி உள்ள சட்டை; அதற்குப் பணம் தந்து விடுகிறேன்" என்றேன்.

"ஓஹோ! பணம் வைத்திருக்கிருயா? எங்கே திருடினுய்?" என்ருள்.

"இல்லே, அம்மா! சாவுகார் பேட்டையில் சேட்டு ராஜா ஒரு ரூபாய் தந்தார். இதோ" என்று ரூபாயைக் கொடுத்தேன். அவள் ரூபாயைத் தட்டிப் பார்த்து ஒரு அழகான கால் சட்டை ஒன்று எடுத்துக் கொடுத்து, "இந்தா, இது ஒண்ணரை ரூபாய் பெறும். மூன்று வருஷம் கிழியாமல் நிற்கும். எடுத்துக்கொண்டு ஓடிப்போ, செட்டியார் வருவதற்குள்!" என்ருள்.

கால் சட்டையை வாங்கிக்கொண்டு அங்கேயே போட்டுக் கொண்டேன். முழங்காலுக்கு மேலே நின்றது. கடைக்காரம்மா கீழே இறங்கி இடுப்பில் வாரை இழுத்து 'பக்லீஸ்' சொருகினுள். ஓட்டம் பிடித்தேன். கோவணத்தை எறிந்துவிட்டுப் பண முடிப்பை மட்டும் சட்டைப் பையில் வைத்துக் கொண்டேன். என் கவலேயெல்லாம் பறந்து போய் விட்டது. குழாயில் முகத்தைக் கழுவிக்கொண்டு மறுபடியும் கடையண்டை போய், "அம்மா, நமஸ் காரம்!" என்றேன்.

"பார்த்தாயா, இப்போது எவ்வளவு அழகாக இருக்கிறாய்! இந்தா ஒரு குட்டிச் சொக்காய், இதை யும் போட்டுக்கொள். பணம் வேண்டாம். எட்டு நாளைக்கு ஒரு தரம் குழாயில் நனைத்து வெயிலில் போடு" என்று ஒரு முழங்கைச் சட்டையும் தந்தாள். அதையும் போட்டுக்கொண்டு, "நீ என்ன சொன்னா லும் நான் கேட்பேன், தாயே!" என்று சொல்லி விட்டுத் துரை மாதிரி நடந்து போனேன்.

**ஆசிரியர் பின்னுரை:** ஆங்கில நூல் ஒன்றில் படித்த ஒரு அத்தியாயம் என் உள்ளத்தில் பதிந் திருந்தது. அதைத் தழுவி இந்தக் கதை எழுதினேன். என் அருமை மக்களே! பிச்சை கேட்கும் குழந்தை களை விரட்டி அனுப்பாதீர்கள். நானும் நீங்களும் ஓவர்ஸ் கண்ணன் நிலையில் இருந்திருக்கக் கூடும். எப்படியோ தப்பினோம். உள்ளத்தைக் கல்லாக்கிக் கொள்ளாதீர்கள். தருமமும் தயையுமே நிரந்தரச் செல்வம். கடவுளுடைய பாங்கியில் நல்ல வட்டி யுடன் பெருகிப் பத்திரமாக இருக்கும்.

# எங்கள் சிவப்பு அனுமார்

பள்ளிக்கூடத்தில் கீழ் வகுப்புகளில் நான் படித்துக்கொண்டிருந்த காலத்துச் சம்பவம். எங்கள் ஊரில் இரண்டு தாலீம்கானுக்கள் இருந்தன. 'தாலீம் கானு' என்ருல் 'கெறடி' அதாவது நாட்டு முறையில் தேகாப்பியாசம், குஸ்தி முதலியன பயிலுமிடம். எங்கள் பள்ளிக்கூடத்துத் தேகப் பயிற்சி வாத்தியார் மகம்மது கவுஸ் ஒரு தாலீம்கானுவை நடத்தி வந்தார். மற்ருென்று இதற்குப் போட்டியாக, கரடிபாவி சுப்பன் என்பவன் பெங்களூரிலிருந்து வந்து ஏற்படுத்தியது. எங்கள் கெறடியில் ஒரு பெரிய சிவப்பு அனுமார் சுவரில் எழுதப்பட்டு விளங்கினர். அந்த உருவத்தை இப்போது நினைத்தாலுங் கூட என் உடம்பெல்லாம் ஒரு வீரிய உணர்ச்சி உண்டாகிறது, கரடிபாவி சுப்பன் கெறடியில் அதே மாதிரி ஒரு கறுப்பு அனுமார் சுவரில் எழுதப்பட்டிருந்ததாகச் சொல்லுவார்கள். அதை நாங்கள் பார்த்தது கிடையாது. விரோதிகளுடைய தாலீம்கானுவுக்குள் நாங்கள் எப்படிப் போவோம்? சொல்லத்தான் கேள்வி. இரண்டு அனுமார்களுக்குள் இந்த வண்ண பேதம் ஏற்பட்டதற்கு வேருெரு

காரணமுமில்லை; தற்செயலாக ஏற்பட்டதுதான். சுப்பன் சீடன் ஒருவன் அடுப்புக் கரியால் எழுதி விட்டான்; எங்கள் தாலீம்கானுவைச் சேர்ந்த எழுத்துக்கார முத்துசாமி காவி மண்ணைக் கரைத்து எழுதினன். போட்டிகள் மும்முரமாக நடந்த போது கறுப்பு அனுமார் கட்சி, சிவப்பு அனுமார்கட்சி என்று இரு அனுமார்களுக்குமே யுத்தம் நடப்பது போலிருக்கும். எங்கள் உற்சாகமும், ஜயித்தபோது உண்டான மகிழ்ச்சியும், தோற்றபோது உண்டான கோபமும் அனுமாரின் ஆவேசமாகத்தான் பொங்கும்.

எங்கள் உஸ்தாது கவுஸ் சாயபு என் மனத்தில் ஒரு தெய்வம்போல் விளங்கினர். படிப்பு வாத்தியார்களில் ஒருவர் பாடங்கள் எல்லாம் தீர்ந்தபின் எங்களுக்கு மாலைப்பொழுதில் பாரதக் கதை சொல்லுவார். (பள்ளிக்கூட வேளையில் இம்மாதிரியான பாட்டிக்கதைகள் சொன்னல், ஹெட்மாஸ்டர் ஆக்ஷேபிப்பார்.) பீமனைப்பற்றி வெகு உற்சாகமாகக் கதை சொல்லுவார். அப்போது என் கண்முன் கவுஸ் சாயபுதான் நிற்பார். துரியோதனனைப் பற்றிச் சொல்லும்போது கரடிபாவி சுப்பனைப் போலிருந்தான் என்று வைத்துக் கொள்ளுவேன். எனக்கு அப்போது ஒன்பது வயது முடியவில்லை. என் வகுப்பில் மற்றவர்கள் எல்லாரும் என்னைவிட நாலு வயதுக்கு மேல் மூத்தவர்களாகவே இருந்தார்கள்.

சுப்பனுடைய கெறடியைச் சேர்ந்தவர்களோடு அநேகமாக நாங்கள் பேசவே மாட்டோம். ஜன்ம விரோதிகளைப் போல்தான் பாவிப்போம். அசுரர்

களுக்கும் தேவர்களுக்குமுள்ள விரோதம் போல் இந்த இரண்டு கெறடிகளைச் சேர்ந்த சீடர்களுக்குள்ளிருந்த உணர்ச்சி என்ருல் மிகையாகாது. இது தாலீம்காஞவில் பயிலாதவர்களுக்கு விளங்காது.

அல்லாப் பண்டிகையில் ஒவ்வொரு வருஷமும் எங்கள் உஸ்தாது புலி வேஷம் போடுவார். ஒரு தடவை எதிர்க்கட்சி சுப்பனும் வேஷம் போட்டான். ஆனல் அவன் போட்டது கரடி வேஷம். புலிக்கட்சியும் கரடிக் கட்சியுமாக ஊரே இரண்டு கட்சியாகப் பிரிந்தது. "இன்றிரவுக்குள் பிரமாதம் நடக்கப்போகிறது" என்று எல்லாரும் எதிர்பார்த்தார்கள்.

ஊர்வலம் இரண்டுமணி நடந்தது. எங்கள் உஸ்தாதுதான் வென்ருர் என்பது எங்களுடைய தீர்மானம். புலியாட்டம் அந்த வருஷத்திற்குமுன் என்றும் அவ்வளவு நன்ருக இருந்ததில்லையென்று எல்லாரும் சொன்ஞர்கள். சந்தைப் பேட்டையில் ஓர் ஆட்டைக் கொண்டுவந்து புலிக்குக் கொடுப்பது வழக்கம், அவர் அதை வாயில் கவ்வி, தூக்கி எறிவார். பிறகு சீடன் ஒருவன் அதை எடுத்துக் கொண்டுபோய் உஸ்தாது வீட்டில் சேர்ப்பான். இந்த வருஷம் புலி வேஷத்தின் ஆவேசம் மிகவும் அளவு கடந்து போயிருப்பதால் ஆட்டின் ரத்தத்தை உறிஞ்சி அங்கேயே சாப்பிட்டு விடுவார் என்று சிலர் சொன்ஞர்கள்.

இம்மாதிரி நடக்கும் என்று நானும் நினைத்தேன். அதற்குமுன் வீட்டுக்குப் போய் விடலாம்

என்பது என் எண்ணம். என் நண்பன் அப்துல் ரஹிமான், "பயப்படாதே, நான் கூட இருக்கிறேன்". என்று எனக்குத் தைரியமும் உற்சாகமும் ஊட்டி, நடுவில் போய்விட வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

எங்கள் புலியைச் சுற்றி ஏராளமான கூட்டம். கரடி சுப்பனைச்சுற்றிச் சிறு கூட்டம்தான் சென்றது. அதுவும் அநேகமாக அவனுடைய கெறடி சீடர்கள் தான். கூட்டம் குறைந்து போனதற்கு ஒருவாறு ஈடாகச் சத்தம் அதிகமாகப் போட்டார்கள். ஆனால் அது பலிக்கவில்லை. தோற்றுப் போனதாக சுப்பனுக்கே உணர்ச்சி ஏற்பட்டது. இதனால் அவனுக்குக் கோபம் அதிகரித்தது. அவன் கொஞ்சம் கள்ளும் குடிப்பதுண்டு. அன்று பலமாகக் குடித்து விட்டிருப்பதாகவும், எப்படியாவது எங்கள் உஸ்தாதைக் கலகத்திற்கு இழுப்பான் என்றும் எங்கள் கூட்டத்தில் பேச்சு, தன் தோல்வியை மறைத்துக் கொள்ள வேண்டுமென்று எண்ணி, சுப்பன் நம்முடைய புலி வேஷக் கூட்டத்தையும் தன் கூட்டத்தையும் ஒன்றுகச் சேர்த்துவிட யோசனை செய்தான். மெள்ள மெள்ள ஊர்வலத்தில் அவன் முந்திக்கொண்டே சென்று, கடைத்தெருவில் பிள்ளையார் கோயிலண்டை வந்தபோது இரண்டு வேஷங்களும் ஒரு கூட்டமாகச் சேர்ந்து போயின. இப்போது இரண்டு உஸ்தாதுகளுக்கும் இடையில் எட்டுகெஜ தூரம் தான் இருந்தது. பாயும் பாய்ச்சல்களில் ஒருவரோடொருவர் மோதிக்கொள்ளும் நிலையில் இருந்தார்கள். இரண்டு பேர்களுக்கும் சங்கிலிகள் போட்டு

ஒவ்வொருவருக்கும் பக்கத்துக்கு இருவராக நான்கு பேர்கள் இழுத்துப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். கூட்டம் பெருங்கூட்டமாயிருந்தாலும் வேஷத்தைச் சுற்றி விசாலமாக இடம் விட்டு ஆட்டத்தைப் பார்த்துக்கொண்டே சென்றது இரண்டு மிருகங்களுக்கும் யுத்தம் எந்த நிமிஷத்தில் நடக்கப் போகிறதோ என்று பார்த்துக்கொண்டிருந்த எல்லாருக்கும் பட படவென்று மார்பில் அடித்துக்கொண்டிருந்தது. நானும் என் நண்பன் அப்துல் ரஹிமானும் கைகோத்துக் கொண்டும் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டே சென்றோம்.

"ரஹிமான், சண்டையானல் நம் உஸ்தாது தானே ஜயிப்பார்?" என்று பொறுக்க முடியாத கவலையுடன் என் நண்பனைக் கேட்டேன். சுப்பன் எங்கள் உஸ்தாதைவிடக் கொஞ்சம் உயரம் அதிகம். நல்ல தடியன் அவனையும் அவனது அட்டகாசங்களையும் பார்த்து என் மனத்தில் கொஞ்சம் சந்தேகம். ஆனல் ரஹிமான், "கட்டாயம் புலிதான் ஜயிக்கும்! பார், இன்னும் ஒரு நிமிஷத்திற்குள்!" என்றான்.

நான் ஆஞ்சநேயனை (அதாவது, எங்கள் சிவப்பு அனுமாரை) மனத்தில் தியானித்தேன். எப்படியாவது எங்கள் உஸ்தாதுக்கு வெற்றி தரவேண்டும் என்று பிரார்த்தித்தேன்.

"ஹா!" என்று ஓர் இரைச்சல் கேட்டது. துள்ளி விழுந்தேன். "பயப்படாதே!" என்றான் ரஹிமான். அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன்.

அடுத்த கணத்தில் சுப்பன் பாய்ந்து எங்கள் உஸ்தாது பேரில் குதித்து அவரைக் கீழே வீழ்த்தப் பார்த்தான். எங்கள் உஸ்தாது அவன் வந்த பக்கம் திரும்பித் தலையை முட்டுக் கொடுத்தார். இருவரும் குஸ்தியில் கலந்தார்கள். கூட்டத்தில் பேரிரைச்சல் கிளம்பிற்று. சுப்பனுடைய சீடர்களின் ஜயகோஷம் எல்லாக் கூச்சலுக்கும் மேல் காதைப் பிளந்தது.

நான்கு போலீஸ் ஆட்கள் திடீர் என்று பிரசன்னமாகி இரண்டு உஸ்தாதுகளையும் பிரித்தார்கள். சங்கிலி பிடித்துக் கொண்டிருந்த சீடர்களின் பாடு வெகு பாடாகப் போயிற்று. கரடிமேல் பாய்ந்து பழிவாங்கப் புலி ஒரு பக்கம் இழுப்பதும், அவர்கள் அப்படிப் பாய்ந்து விடாமல் இழுத்துப் பிடிப்பதும், கூட்டத்தில், "சங்கிலியை விடு, விடு" என்று பலர் கூச்சல் போடுவதும், போலீசார், "போ! போ!" என்று தடிப் பிரயோகம் செய்வதும், சில நிமிஷங்கள் வரையில் ஒரே அமர்க்களமாக இருந்தது. பிறகு நான்கு போலீஸ்காரர்களில் மூவர் ஜனக் கூட்டத்தைச் சமாளித்துக்கொண்டு சென்றார்கள். ஒருவன் புலிக்கும் கரடிக்கும் மத்தியில் கையில் தடியுமாகச் சென்றான். கொஞ்சதூரம் போனதும் அந்தப் போலீஸ்காரனுடன் தங்க சரிகை கொண்ட சிவப்பு உருமாலை தரித்த போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருவர் வந்து சேர்ந்தார். ரஹிமான் என் காதில் மெள்ள, "அவர்தான் ஹெட் கான்ஸ்டபிள் வரதராஜுலு" என்றான். (ரஹிமானுக்குத் தெரியாத விஷயம் ஒன்றுமில்லை. அவன் என்னைவிட எட்டு வயது பெரியவன். என் வகுப்பிலேதான் படித்துக்

கொண்டிருந்தான்.) 'ஹெட்டு வரதராஜு' என்றால் ஊரே நடுங்கும். அவருடைய உடையும் அவருடைய தலைப்பாகையில் சரிகையின் மினுமினுப்பும் என் மனத்தைக் கவர்ந்தன.

தான் ஜயித்து விட்டதாகச் சுப்பனுடைய எண்ணம். அவனுடைய சீடர்களின் எக்களிப்புச் சத்தம் எங்களுக்குப் பொறுக்க முடியாததாக இருந்தது.

"ரஹிமான்! பார்த்தாயா, என்ன அவமானம் செய்து விட்டான் கரடிபாவி சுப்பன்!" என்றேன். அவனுக்கும் மிகுந்த கோபம். பல்லைக் கடித்துப் பதில் சொல்லாமல் நின்றான்.

புலி உறுமிக்கொண்டு மெதுவாகவும் கம்பீர மாகவும் சென்று கொண்டிருந்தது. அவ்வப்போது பின் காலில் நிமிர்ந்து நின்று பேரிரைச்சல் போடும். மறுபடி கம்பீரமாக நகர்ந்து செல்லும்.

"பார், இன்னும் கொஞ்ச நேரத்தில்" என்றான் ரஹிமான்.

"எப்படியாவது அந்தச் சுப்பனை அவமானப் படுத்திப் பழிவாங்க வேண்டும்" என்று என் உள்ளம் முழுதும் பக்திப் பரவசமாகி எங்கள் அனுமாரின் தியானமாகவே இருந்தது. புலி அனுமாராகத் தோன்றினார்; அனுமார் புலியைப் போல் மஞ்சள் பட்டைகளுடன் என் மனத்தில் தோன்றினார்.

"பார்த்தாயா, உங்கள் புலியின் கதி என்னவா யிற்று!" என்று இந்தச் சமயத்தில் என் காதண்டை

திடீர் என்று யாரோ ஒருவன் சொன்னான். திரும்பிப் பார்க்க, செக்குக்காரத் தெருவு சஞ்சீவி. இவன் சுப்பனுடைய தாலீமைச் சேர்ந்தவன். என் வகுப்பில் படித்துக்கொண்டு இருந்தான். ரஹிமான் வயது. குஸ்தியில் நல்ல கெட்டிக்காரன். ரஹிமானைப் பல தடவை தோற்கடித்தவன். படிப்பு சூன்யம்.

"என்னத்தைப் பார்ப்பது? போலீஸ்காரர்கள் இல்லாதிருந்தால் உங்கள் சுப்பன் கதி இன்று என்ன வாகுமோ, தெரியுமா?" என்றேன்.

"எங்கள் கறுப்பு அனுமாருக்குத் தேங்காய் உடைத்திருக்கிறேன். அது வீணாகுமா? அதுதான் இப்படியாச்சு" என்றான்.

இதைக் கேட்டதும் எனக்குத் தாங்க முடியவில்லை. "நாளை உனக்கு இரண்டு தேங்காய் உடைப்பேன்" என்று எங்கள் அழல்வண்ண ஆஞ்சநேயனைத் தியானித்தேன்.

"அதோ!" என்றான் ரஹிமான்.

திரும்பிப் பார்த்தோம். எங்கள் உஸ்தாது தேகத்தைச் சுருக்கிக்கொண்டு பின் கால்கள் மடங்க, பாயும் வண்ணமாக நின்று, ஓர் உறுமல் உறுமினார் அப்போது அவர் காட்டிய காட்சி பெங்களூரில் லால்பாக்கில் நான் பார்த்த உண்மை வேங்கையை போலவே இருந்தது. சங்கிலிபிடித்தவர்கள் என்ன. காரணமோ சங்கிலியை விட்டு விட்டார்கள். அடுத்த கணம், "அல்லல்லோ! குலி குலி!" என்று கூட்டத்தில் ஒரு பேரிரைச்சல் கிளம்பிற்று. காளியம்மனுக்கு எருமையைப் பலி கொடுக்கும்போது

இந்த இரைச்சல் போடுவது வழக்கம். எங்கள் புலி ஒரு தாவு தாவிற்று. போலீஸ் ஹெட் வரதராஜுலு வின் தலைமேல் புலி இறங்க, அவர் தரையில் விழுந் தார். மறுபடி ஒரு தாவுத் தாவி, சுப்பன் கழுத்தின் மேல் இறங்கிற்று. அவனும் தரையில் தலைகீழாக விழுந்து உருண்டான். விழுந்த கரடியின் தோளைப் புலி கவ்விக்கொண்டு வீரக்காட்சி தந்தது. கூட்டத் தில் அடங்காத மகிழ்ச்சி. "செத்தான்! செத்தான்!" என்று பேரிரைச்சல் கிளம்பிற்று. கீழே விழுந்த ஹெட் கான்ஸ்டபிள் வரதராஜுலு மெள்ள எழுந்து உருமாலையைத் தட்டித் தலையில் மறுபடி கம்பீரமாக அணிந்தது அனுமார் தட்டிக் கொடுத்த மைனாக பருவதக் காட்சியாக இருந்தது. தம் முடைய வெட்கத்தை மறைக்க வாயில் ஊது குழாய் வைத்து, "விஸில்" அடித்தார். அதற்குள் நம்முடைய புலி இன்னொரு தாவுத் தாவி, எங்கேயோ மறைந்து போயிற்று.

"எங்கே? எங்கே? என்று கூட்டமெல்லாம் ஒரே கலவரம். அடுத்த கணத்தில் நாங்கள் இருந்த இடத்திற்கு இருபது கெஜத்திற்கு முன்னால் தனசீலர் களுடன் முன்போல் கம்பீரமாகச் சென்று கொண் டிருந்தது.

ரஹிமானைக் கட்டிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் விட்டேன்.

"பார்த்தாயா!" என்றான் ரஹிமான்.

"நாளை அனுமாருக்கு இரண்டு தேங்காய் உடைக்கப் போகிறேன். நீ தப்பாமல் வரவேண்டும்" என்றேன்.

இந்தச் சம்பவத்தின் காரணமாக எங்கள் உஸ்தாது மகம்மது கவுஸுக்குக் கச்சேரியில் விசாரணை செய்து ஐந்து ரூபாய் அபராதம் போட்ட தாக எங்கள் பள்ளிக் கூடத்தில் 'குசுகுசு'ப் பேச்சு. நாங்கள் யாரும் அவரைக் கேட்கவில்லை. போலீஸார் சுப்பனுடைய கட்சியில் சேர்ந்துகொண்டு விட்டார் கள். பெரிய அநியாயம் செய்து விட்டார்கள் என்று நாங்கள் எல்லோரும் எண்ணினோம். 'அபராதம் போட்டால் என்ன?' என்று எங்கள் உஸ்தாது மேல் இரு மடங்குக் கௌரவமும் அன்பும் செலுத் தினோம்.

இது நடந்து ஐம்பது ஆண்டுகளாயின. இன்னும் அதிகமாகவே இருக்கும். காலம் ஓட்டமாக ஓடு கிறது. நேற்று நடந்தது போலிருக்கிறது. சென்ற வாரம் எங்கள் ஊருக்கு ஏதோ காரணமாகப் போயிருந்தபோது எங்கள் தாலீம்கானா இருந்த இடத்திற்கு முன் நின்றேன். அந்த இடத்தில் ஒன்று மில்லை. எல்லாம் பாழாகக் கிடந்தது. முள்செடிகள் வளர்ந்து அங்கே ஒரு வெள்ளாடு மேய்ந்து கொண் டிருந்தது. இப்போது மகம்மது கவுஸ் மேலுலகத் தில் இருக்கிறார். அவர் வீட்டில் வேறு யாரோ குடி யிருக்கிறார்கள். அவரைச் சேர்ந்தவர்கள் கூட அல்ல.

கெறடி இருந்த இடத்தில் மேய்ந்து கொண் டிருந்த ஆட்டைப் பார்த்த வண்ணமாக வெகு நேரம் நின்றேன். அந்த ஆட்டின் பேரில் என்னை யறியாத ஓர் அன்பு எனக்கு உண்டாயிற்று. என் மனக் கற்பனையில் அதன் முகம் வர வர மாறி, கவுஸ்

உஸ்தாதே அங்கே நின்றார். அவர் சுவரைப் பிடித்துக் கொண்டு, "ஊட் பைட்" தேகாப்பியாசம் செய்வது போல் மனக் காட்சி கண்டேன்.

"போகலாமே!" என்றார் என் கூட இருந்த கூட்டுறவு இன்ஸ்பெக்டர் சீதாபதி ராவ். என் பகற் கனவிலிருந்து இறங்கினேன்.

"உமக்கு ஜிம்னஸ்டிக்ஸ் இன்ஸ்பெக்டர் மகம்மது கவுஸ் தெரியுமா?" என்று கேட்டேன்.

பாவம், சீதாபதி ராவ் அவரை எவ்வாறு அறிவார்? உத்தியோகத்திற்காக இந்த ஊருக்கு எங்கிருந்தோ நாலு ஆண்டுகளுக்கு முன்தான் வந்தவர்.

"அது யார்? எனக்குத் தெரியவில்லையே!" என்றார்.

இவரிடம் எங்கள் உஸ்தாதைப் பற்றிப் பேசி என்ன பயன்? நானும் எத்தனையோ வாத்தியார் களிடம் எத்தனையோ பாடங்கள் படித்தேன். அவர் களில் யாரும் எங்கள் மகம்மது கவுஸ் உஸ்தாதுக் குச் சமானமாக மாட்டார்கள்.

அங்கிருந்து கிழக்கே சென்று அவ்விடமுள்ள குன்றண்டை போனோம். குன்றின் அடிவாரத் தண்டை பாறையில் ஒரு பெரிய அனுமார் செதுக்கப் பட்டிருந்தது. அங்கே ஊரார் வேண்டுதல்கள் வேண்டிக்கொண்டு தேங்காய் உடைத்துப் பூஜை செய்வதுண்டு. அந்த அனுமாரும் செங்காவி பூசி எங்கள் தாலீமில் வரைந்திருந்தது போலவே இருந்த

படியால் அவர் மேல் எங்களுக்கெல்லாம் அதிக பக்தி. அந்த அனுமாரையாவது பார்த்துக் கொஞ்சம் ஆறுதல் அடையலாம் என்று அவ்விடம் போனேன். சுற்றிச் சுற்றிப் பார்த்தும் அவர் காணப் படவில்லை.

"இங்கே ஒரு பெரிய அனுமார் பாறையில் இருக்குமே, அது என்னவாயிற்று?" என்று சீதாபதி ராயரைக் கேட்டேன்.

"அதோ பாருங்கள், அதுதான் அனுமார் கோவில்" என்றார். ஒரு மண்டபம் தென்பட்டது. யாரோ பக்தர்கள் அசட்டுத்தனமாக எங்கள் அனுமாரைச் சுவர் கட்டி அடைத்துப் போட்டு ஒரு கோயிலாகச் செய்து விட்டிருப்பதைப் பார்த்தேன். ஊரெல்லாம் பாழாய்ப் போனமாதிரி இந்த மலையடி அனுமாரும் கோயிலுக்குள் மறைந்து போனாரே என்று வருத்தப்பட்டேன் கோயிலுக்குள் போனேன் அனுமார் என்னமோ இருந்தார். ஆனால் முன் மாதிரி ஜொலிக்கவில்லை. அடங்கி ஒடுங்கி அரக்கர் கையில் சிக்கின மாதிரி இருந்தார்.

ரஹிமான் வீட்டைக் கண்ணால் பார்க்கலாம் என்று ஆசை தோன்றிற்று. அந்தத் தெருவுக்குப் போனேன். வீடு மட்டும் முன் போலவே செம்மண் பூசிய வண்ணமாக இருந்தது. ஆனால் யாரோ குடியிருந்தார்கள்.

ரஹிமான் தன் வீட்டு வாசலில் சமையலுக்காக விறகு வெட்டுவது வழக்கம். அதைப் பார்த்து அனுபவித்துக்கொண்டு சில சமயம் நான் நிற்பதுண்டு.

எத்தனையோ சிநேகிதர்களைப் பார்த்திருக்கிறேன்—என் ரஹிமானுக்குச் சமானம் யாரும் ஆகமாட்டார்கள்! அவன் இப்போது எங்கே என்ன தொழிலில் இருக்கிறான் என்பதுகூட எனக்குத் தெரியாது; சொல்லுவாரும் இல்லை. உயிரை வேண்டுமானாலும் தருவான். ஒரு பரீக்ஷையும் அவன் சரியாகத் தேற வில்லை. என் படிப்பில் அவனுக்கு முடியுமானால் பாதி தந்திருப்பேன்; இருவரும் பாஸ் செய்திருக்கலாம். பாவம்! அவனை வாத்தியார்கள் எல்லாரும் சேர்ந்து கோளாறு செய்து விட்டார்கள். பள்ளிக்கூடம் விட்டபின் அவன் என்னவானானோ, தெரியவில்லை. என்ன விலை கொடுத்தால் அத்தகைய நண்பன் எனக்குக் கிடைப்பான்?

குழந்தைகள், உங்கள் நண்பர்களைப் பற்றிக் கவனமாயிருங்கள். என்னைப்போல் ஏமாற்றமடையாதீர்கள். நட்பைப்போல் ஒரு செல்வமுமில்லை. மற்றதெல்லாம் பொய்; காற்றைப் போல் பறந்து போகும். அன்பும் நட்புமே வாழ்க்கையில் பெருத்த செல்வம்.

# சாட்சி கோபாலன்

காஞ்சீபுரத்தில் தேவய்யர் என்ற பிராமண மிராசுதார் ஒருவர் இருந்தார். அவர் வடக்கே தீர்த்தயாத்திரை போகத் தீர்மானித்துத் தமக்குத் தூரபந்துவான ஓர் ஏழை வாலிபனைத் துணையாகக் கூட்டிக்கொண்டு சென்றார். விஷ்ணு சர்மா என்று அவனுக்குப் பெயர். கிருஷ்ணா, கோதாவரி, கங்கை, யமுனை முதலிய நதிகளில் ஸ்நானம் செய்து பல கோயில்களில் சுவாமி பூஜை செய்துவிட்டு இருவரும் பிருந்தாவனத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே கோபாலன் சந்நிதியண்டை ஒரு மடத்தில் சில நாள் தங்கினார்கள்.

அவ்விடம் தேவய்யருக்குக் கடுஞ் சுரம் கண்டு பல நாள் படுத்த படுக்கையாக இருந்தார். விஷ்ணு அவருக்கு எல்லாவிதப் பணியும் மிக்க பக்தி சிரத்தையுடன் செய்து வந்தான். ஒரு மாதம் படுத்துக் கிடந்த பின் தேவய்யர் சொஸ்தமடைந்தார். கோபாலன் சந்நிதியில் சுவாமியைக் கும்பிட்டுவிட்டு விஷ்ணு சர்மா தமக்குச் செய்த சிசுருஷையை மிகவும் மெச்சி, "அப்பா! நீ என்னைக் காப்பாற்றினாய். உனக்கு என் மகள் ருக்மிணியை விவாகம் செய்து

கொடுக்கத் தீர்மானித்து விட்டேன்" என்றார். தாய் தகப்பன் இழந்தவனும் பரம ஏழையுமான விஷ்ணு சர்மா, தேவய்யர் பெண்ணை விவாகம் செய்து கொண்டால் தரித்திரத்தின் கஷ்டம் நீங்கிச் சுகமாக வாழ்க்கை நடத்தலாம் என்று அளவு கடந்த சந்தோஷ மடைந்தான்.

"உங்களுக்கு நான் தகுந்த மாப்பிள்ளையா?" என்று விஷ்ணு கேட்டான்.

"நீ எனக்குச் செய்த உபகாரத்திற்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்? இந்தக் கோபாலன் என்னைக் காப்பாற்றினான். அவன் முன்னிலையில் உனக்கு என் பெண்ணைத் தந்தேன்" என்று மிராசு தார் வாக்குத் தத்தம் செய்துவிட்டார்.

பிறகு தேவய்யரும் விஷ்ணுவும் ஊருக்குத் திரும்பினார்கள். வீட்டுக்கு வந்தவுடன் தேவய்யர் தம் குடும்ப காரியங்களில் ஈடுபட்டார். விஷ்ணு வுக்குத் தாம் செய்த வாக்குத் தத்தத்தைப் பற்றிப் பேசவில்லை.

ஒரு வருஷம் கழித்துச் சித்திரை மாதம் முகூர்த் தங்கள் நடைபெறும் காலம் வந்தவுடன் ஒரு நாள் விஷ்ணு, தேவய்யரிடம் வந்து மிகப் பணிவுடன் அவருடைய வாக்கை ஞாபகப்படுத்திக் கேட்டான்.

தேவய்யரின் விடை அவ்வளவு திருப்திகரமாக இருக்கவில்லை.

"ஆமாம்! சொன்னது உண்டு; ஆனால் இப்போது என்ன அவசரம்? நீ ஏதாகிலும் கொஞ்சம் படித்துக் கல்வி அடைந்தால் என் மகளுக்குச் சரியான மணமகனாவாய். இப்போது அவளும் சம்மதிக்க

மாட்டான். என் குமாரர்களும் சம்மதிக்க மாட்டார்கள்" என்றார்.

தேவய்யருடைய புதல்வர்கள் இருவர் வயது வந்தவர்கள். தங்களுடைய சகோதரியை இவ்வளவு ஏழைப் பையனுக்குக் கொடுத்து விவாகம் செய்து விட அவர்கள் பிரியப்படவேயில்லை. அவர்கள் விஷ்ணுவைத் திட்டி வீட்டிலிருந்து விரட்டி விட்டார்கள்.

"ஏதோ காயலாவாகக் கிடந்த போது செய்த பணிவிடையை எண்ணி உபசாரமாகச் சொன்ன பேச்சை வைத்துக்கொண்டு இம்மாதிரி பேசுகிறாயா? போக்கிரிப் பயலுக்கு என்ன தைரியம்!" என்று சொல்லித் துரத்திவிட்டார்கள்.

ஏமாற்றமும் அவமானமும் பட்ட விஷ்ணு ஊரில் பெரிய மனிதர்களிடம் போய் முறையிட்டான்.

"சத்தியப் பிரமாணம் செய்து எனக்கு ஆசை வார்த்தைகள் சொல்லிய இந்தப் பிராமணர் இப்போது அநியாயமாக நடந்து கொள்கிறார். நீங்கள்தான் எனக்கு நியாயம் வழங்க வேண்டும்" என்று சொன்னான்.

"வாக்குத் தத்தம் செய்திருந்ததால் அதன்படி செய்ய வேண்டியதுதான் நியாயம். பையன் ஏழையாய் இருந்தால் என்ன? படிப்பில்லாதவனாயிருந்தால்தான் என்ன? நல்ல குலத்தைச் சேர்ந்த ஒழுக்கமுள்ள பையன்" என்று அவர்கள் தேவய்யரிடம் சொல்லிப் பார்த்தார்கள்.

ஆனால் தேவய்யரின் குமாரர்கள் முடியாது என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார்கள். "இவன் பேச்சு உண்மையோ, பொய்யோ, யாருக்குத் தெரியும்? சாட்சியம் கொண்டுவரச் சொல்லுங்கள்" என்று சொல்லிச் சிபாரிசு செய்த பெரியோர்களை அனுப்பி விட்டார்கள்.

விஷ்ணு சர்மன் ஒரே பிடிவாதமாகப் பிருந்தாவனத்துக்குப் போகப் புறப்பட்டான். எப்படியாகிலும் விவாகம் முடித்துக் கொள்ள வேண்டும் என்பது அவன் ஆசை. தேவய்யரின் மகள் பேரில் அவனுக்குத் தீராத காதலும் ஏற்பட்டு விட்டது.

"பிருந்தாவனத்துக் கோபாலன் என்னைக் கைவிட மாட்டான். அவன் சந்நிதியில் அல்லவோ தேவய்யர் வாக்குத் தத்தம் செய்தார்? அந்தக் கோபாலனையே சாட்சியாக வரும்படி செய்கிறேன்" என்று பிருந்தாவனத்துக்குக் கால் நடையாகப் போனான்.

வெகு கஷ்டப்பட்டு விஷ்ணு பிருந்தாவனம் போய்ச் சேர்ந்தான். அங்கே கோபாலனின் கோயிலில் மூர்த்திக்கு எதிரே உட்கார்ந்து அன்ன ஆகாரமில்லாமல் கண்ணனை வேண்டிக்கொண்டு தவமிருந்தான். இப்படி ஏழு நாட்கள் அங்கேயே இரவும் பகலும் கழித்தான். எட்டாவது நாள் கண்ணன், பையன் பேரில் அன்பு கொண்டு அவன் சொப்பனத்தில் பிரசன்னமானான்.

"எல்லோரும் என்னை ஏமாற்றப்பார்க்கிறார்கள். எனக்காக நீதான் வந்து சாட்சி சொல்ல வேண்டும்!"

என்று பையன் கண்ணபிரானைத் தைரியமாகக் கேட்டான்.

பெண்மேல் உண்மையாகக் காதல் கொண்ட யோக்கியமான அந்தப் பையனுடைய பக்தியைக் கண்டு, "வருகிறேன் !" என்று கோபாலனும் ஒப்புக் கொண்டான்.

"ஆனால் ஒரு நிபந்தனை. நீ முன்னால் செல். நான் உன் பின்னால் கூடவே வருவேன். நீ சந்தேகப்பட்டு பின்னால் திரும்பிப் பார்த்தாயானால் அந்த இடமே நான் நின்று போவேன். அதற்கு மேல் செல்ல மாட்டேன்" என்றான் கண்ணபிரான்.

"அப்படியே சரி!" என்று பையன் எழுந்து வெகு சந்தோஷமாக ஊர் திரும்பிச் சென்றான். அவன் செல்லும் போது பின்னால் கோபாலனுடைய கால் சலங்கை, "ஜல்! ஜல்!" என்று ஒலித்தபடியால் தன் பின்னால் கோபாலன் வருவதைப் பையன் உணர்ந்து கொண்டு வெகு உற்சாகமாகவும் வேகமாகவும் நடந்து சென்றான். எங்கேயாவது சாப்பாட்டுக்கும் படுத்துத் தூங்குவதற்கும் விஷ்ணு தங்கினால் அங்கே கோபாலன் மறைந்து போவான். மறுபடி பிர யாணம் கிளம்பியவுடனே சலங்கைச் சத்தம் பின்னால் கூடவே வரும். பையன் பூரித்த உள்ளத் துடன் வழி நடந்து சென்றான்.

'காஞ்சீபுரம் போய்ச் சேர்ந்ததும் கோபாலன் சாட்சியம் சொல்லுவான். அதன் மேல் கலியாணம் நிச்சயமாக முடியும்' என்று விஷ்ணு சர்மனுக்குத் தாங்க முடியாத ஆனந்தம். கால் வலியையும்

பசியையுங்கூடக் கவனியாமல் நடந்தான். இப்படிப் பையனும் கோபாலனும் பூரி ஜகன்னாதன் என்னும் பிரசித்த க்ஷேத்திரத்தின் அருகில் வந்துகொண்டிருந்தார்கள். அங்கே மணல் பூமியில் நடக்கும் போது கோபாலன் கால்கள் மணலில் இறங்கினபடியால் சலங்கை ஓசை நின்று விட்டது. சத்தம் கேட்கவில்லையே என்று சந்தேகப்பட்டுத் தன் பிரதிக்ஞையை மறந்து போய்த் திடீர் என்று விஷ்ணு திரும்பிப் பார்த்தான். திரும்பிப் பார்த்த உடனே அதுவரை ஊனுடலில் வந்த கோபாலன் கற்சிலையாக மாறி நின்றான்!

"ஐயோ, கெட்டேனே!" என்று விஷ்ணு அலறினான். கோபால விக்கிரகத்துக்கு முன் கீழே விழுந்து புரண்டு அழுதான். நினைவு இழந்து அங்கேயே வெகு நேரம் கிடந்தான். பிறகு பையனுக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று.

"காஞ்சீபுரத்துக்குப் போய் பிராமண விருத்தர்களை இவ்விடம் அழைத்து வருவேன். இங்கே அவர்களை அழைத்துக் கொண்டு வந்தால் கோபாலன் எனக்குச் சாட்சியம் சொல்லுவான். விவாகமும் முடியும்" என்று தீர்மானித்தான். இது கண்ணனே பையனுக்குத் தந்த எண்ணம்.

பையன் புறப்பட்டுக் காஞ்சீபுரம் போய்ச் சேர்ந்தான். "வாருங்கள்! கோபாலன் எனக்காக வந்திருக்கிறான். வழியில் ஓரிடத்தில் சாட்சியமும் சொல்லுவான். நான் வரம் பெற்று வந்திருக்கிறேன்" என்று பந்துக்களிடம் சொன்னான்.

கேட்டவர்கள் சிலர் நகைத்தார்கள். சிலர், "இருந்தாலும் இருக்கலாம்; பையன் நல்ல பையன்! கண்ணன் எதைத்தான் செய்யமாட்டான்?" என்று சொன்னார்கள்.

செய்தி ஊரில் பரவிற்று. பெரியோர்கள் ஒரு நாளை நிச்சயித்து, தேவய்யர் அவருடைய குமாரர்கள் எல்லோரையும் கூட்டிக்கொண்டு விஷ்ணு சர்மனைப் பின்தொடர்ந்து ஜகந்நாதனுக்குக் கூட்டமாகச் சென்றார்கள்.

அங்கே விஷ்ணு சர்மா சொன்ன இடத்தில் கோபால விக்கிரகம் நிற்பதைக் கண்டார்கள். எல்லாரும் கூடி முறைப்படி ஆராதனை செய்து "கண்ணா! விஷ்ணு சர்மன் சொல்லுகிறபடி தேவய்யர் தம் பெண்ணை அவனுக்குக் கொடுத்து விவாகம் செய்து கொடுக்கப் பிருந்தாவனத்தில் உன் சந்நிதியில் வாக்குத் தத்தம் செய்தது உண்மையா?" என்று கேட்டார்கள்.

"உண்மை" என்று கோபால விக்கிரகம் வாய் திறந்து எல்லாரும் கேட்கும்படிக் கணீரென்று சொல்லிற்று. கூடியிருந்தவர்கள் அனைவரும் திகைத்துப் போனார்கள்.

பிறகு காஞ்சீபுரத்தில் விஷ்ணு சர்மனுக்கு விவாகம் வெகு விமரிசையாக நடந்தது. காஞ்சி அரசன் பூரி ஜகன்னாதத்தில் மணலில் நின்ற கோபாலனுக்கு ஒரு கோவிலும் கட்டினான். அந்தக் கோயில் இன்றும் இருக்கிறது. "சாட்சி கோபாலன் சந்நிதி" என்று அந்தக் கோயிலுக்கு இப்போதும் பெயர் வழங்கி வருகிறது.

# குப்பையிலே குருக்கத்தி

*சிப்பியிலே நல்லமுத்து விளைந்திடும்*
*செய்தி அறியாயோ—நன்னெஞ்சே!*
*செய்தி அறியாயோ?*

குப்பையிலே மலர்கொஞ்சுங் குருக்கத்திக்
கொடி வளராதோ ?—நன்னெஞ்சே !
கொடி வளராதோ ?

கிருஷ்ணப்ப நாயக்கன் தெருவில் லால்ஜி சேட் வீட்டில் அவருக்கு இரண்டாவது கலியாணம். தெருவு முழுவதும் பந்தல் போட்டு அடைத்துவிட்டு மிக விமரிசையாக விருந்து நடந்தது.

வேலைக்காரர்கள் பலர் மிகப் பரபரப்பாக வேலை செய்தார்கள். இலைகளை எடுத்துக் குப்பைத் தொட்டியில் போட்டார்கள். தொட்டியில் போடப்பட்டது வழக்கம் போல் பாதி வெளியில்தான் விழுந்தது. உடனே நான்கு நாய்கள் சுற்றிக்கொண்டன. ஐந்தாவதாகிய ஒரு நாய் கொஞ்சம் பதுங்கிப் பதுங்கி நின்று பங்கெடுக்கப் பார்த்தது. மற்ற நாய்கள் 'வள், வள்' என்று குலைத்தும் அதன் மேல் பாய்ந்தும் அதை விரட்டித் துரத்தி விட்டன. அந்த நாய் அந்தத் தெரு நாயல்ல. நாய்களுக்குள் விய வஸ்தை உண்டு. ஒரு தெரு நாய் இன்னொரு தெருவுக்கு வரக் கூடாது.

❋ ❋ ❋

"அடே, கிருஷ்ணப்ப நாயக்கன் தெருவில் சேட்டுக் கிழவருக்குக் கலியாணமடா! வா, அங்கே போகலாம்!' என்றான் ஒரு பையன். அவனுக்கு இடுப்பில் துணி இல்லை. கோவணம்தான் கட்டி யிருந்தான். வயது பதினாலு இருக்கும். சென்னையில் இந்த மாதிரிச் சிறு பையன்கள் தெருவில் அலைவதைக் கண்டிருப்பீர்கள். வெகு சாமர்த்தியமுள்ள பையன்கள். ஆனால் அவர்களைக் கவனிப்பவர் யாரும் இல்லை.

"அங்கே போனால் விரட்டியடிப்பார்கள்" என்றான் மற்றொருவன். இவனுக்கு எட்டு வயதுதான் இருக்கும்.

"இல்லை, இல்லை! சேட் வீட்டார் நல்லவங்கடா!" என்றான் முதல் பையன்.

"வேண்டாமடா! ஏனாதிகள் வந்து அடிச்சுப் போடுவாங்கடா!" என்றான் இரண்டாவது பையன்.

"இல்லே. பயப்படாதேடா! அவங்க யாரும் வரக் காணோம். அவர்களுக்குத் தெரியவில்லை போலிருக்குது" என்றான் முதல் பையன்.

இருவரும் கிருஷ்ணப்ப நாயக்கன் தெருவுக்கு ஓடினார்கள். போய், குப்பைத் தொட்டியண்டை இலைகளை இழுத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்த நாய்களை யெல்லாம் கல்லை விட்டெறிந்து விரட்டித் துரத்தினார்கள். துரத்திவிட்டு இலைகளை யெடுத்து அவசர அவசரமாக அவற்றிலிருந்த சாப்பாட்டுப் பண்டங்களை வழித்து எடுத்து ஒரு இலையில் போட்டுச் சேர்த்துக் கொண்டும் அவ்வப்போது

கொஞ்சம் வாயில் போட்டுச் சாப்பிட்டுக் கொண்டும் இருந்தார்கள்.

திடீரென்று தெருக்கோடியில் இரைச்சல் கிளம்பிற்று.

"அடே வந்துட்டாங்கடா!" என்றான் சின்னப் பையன்.

"கொல்லு! திருட்டுப் பசங்கள்! யாரடா நீங்கள், எங்கள் தெருவுக்குள் வந்து சாப்பிடுகிறீர் கள்?" என்று சொல்லிக்கொண்டு ஐந்தாறு ஏறுதிகள் வந்தார்கள். அவர்களில் இரண்டு பேர் ஸ்திரீகள். கூட்டமாக வந்து பையன்களைச் சுற்றிக் கொண்டு அடித்தும் உதைத்தும் துரத்திவிட்டார்கள். துரத்திவிட்டுக் குப்பைத் தொட்டியைச் சுற்றி நிதானமாகச் சிரித்துக்கொண்டு சந்தோஷமாக உட்கார்ந்தார்கள்.

எல்லா இலைகளையும் ஒருங்கே எடுத்து வைத்துக் கொண்டு அவற்றிலிருந்த பண்டங்களை யெல்லாம் ஒரு துணியில் போட்டுக் கட்டிக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

* * *

அடுத்த நாள் சேட் வீட்டண்டை, "சாமி! சாமி!" என்று கூப்பிட்டுக் கொண்டு ஒரு பையன் வந்து நின்றான்.

வீட்டுக்குள்ளிருந்து வேலைக்காரன் ஒருவன் ஒரு எச்சில் இலையை எடுத்துக்கொண்டு வெளியே

வந்தவன் "படவாப் பயலே! இவ்வளவு தைரியமா உனக்கு? போ வெளியே! தொட்டியில் போட்ட பிறகு எடுத்துக் கொள்!" என்றான்,

"இல்லை, சாமி! ஏழைதிகள் அடிச்சுப் போடு வாங்க. கையில் கொடுத்துவிடுங்கோ. நான் இங்கேயே சாப்பிட்டு விட்டுத் தொட்டியில் இலையைப் போட்டு விடுகிறேன்!" என்றான் பையன்.

இவன் நேற்று நாம் பார்த்த பையன்களில் பெரியவன். சின்னவன் வரமாட்டேன் என்று சொல்லி விட்டான்.

வேலைக்காரன் பையனிடம் கருணைகொண்டு இலையை அவன் சொன்னபடியே அவன் கையில் பொத்தென்று போட்டான்.

"சாப்பிட்டு இலையை இங்கேயே எறிந்து விடாதே! உதைத்துப் போடுவேன்!" என்று சொல்லி விட்டு வேலைக்காரன் உள்ளே போய்விட்டான்.

"சாமி! சாமி!" என்றான் பையன் மறுபடியும்.

"என்னடா, படவாப் பயலே!" என்று வேலைக் காரன் திரும்பிப் பார்த்து அதட்டினான்.

"இந்தாங்கோ சாமி, மோதிரம்" என்றான் பையன்.

உடனே வேலைக்காரன் வாசலுக்கு வந்தான்.

"இலையில் மோதிரம் கிடைத்ததுங்கோ, இந் தாங்கோ!" என்று ஒரு வயிரக் கல் இழைத்த மோதிரத்தைக் கொடுத்தான். வேலைக்காரன் அதைத் தன் கைச் சொம்பிலிருந்த ஜலத்தை விட்டு

அலம்பி எடுத்துப் பார்த்தான். பளபளவென்று மின்னிற்று.

"அடே, எஜமானர் மோதிரமடா!" என்று மெள்ளச் சொல்லி வாங்கிக்கொண்டு உள்ளே போனான்.

* * *

லாலஜி சேட்டு மகன் ராம்லால் சேட்டினுடைய வயிர மோதிரம் காணமல் போனதற்காகப் போலீசார் வெகு மும்முரமாகத் துப்பு விசாரித்துக் கடைசியில் ஒரு ஷராப்புக் கடையில் கண்டு பிடித்தார்கள். கடைக்காரனை விசாரித்தார்கள். "யாரோ ஒரு பையன் கொண்டு வந்து இது நல்ல வயிரமா பாருங்கள்!" என்று சொன்னன். வாங்கிக்கொண்டு. "நாளைக்கு வா, பார்த்துச் சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டு வயிரப் பரீட்சைக்காரன் வரட்டும் என்று எடுத்து வைத்திருந்தேன். அதற்குள்ளே நீங்கள் வந்து இதைத் திருட்டுச் சொத்து என்கிறீர் கள்." என்று ஷராப்புக் கடைக்காரன் சொன்ன கதை இன்ஸ்பெக்டருக்குத் திருப்தி யளிக்கவில்லை. "அரஸ்டு செய்துதான் தீரவேண்டும். உன் பேரில் பல கேஸ்கள் பதிவாயிருக்கின்றன" என்று சொன்னார் இன்ஸ்பெக்டர்.

"வேண்டாம் ஸார்! கல்யாணத்தன்று ஒரு பையன் வீட்டைச் சுற்றிக் கொண்டிருந்தான். அவனை நான் கண்டுபிடித்துக் கொடுக்கிறேன். அவனை விசாரியுங்கள். ஒரு வேளை உண்மை தெரியும்" என்ருன் சேட் வீட்டு வேலைக்காரன். அங்கே

இன்ஸ்பெக்டரைச் சுற்றிக்கொண்டிருந்த தெருக் கூட்டத்தில் ராம்லால் சேட்டுடன் அவனும் வந்திருந்தான்.

* * *

எச்சில் பொறுக்கிப் பையன் போலீஸ் ஸ்டேஷனில் கைதியாக அழுதுகொண்டிருந்தான். பலமாகக் கூச்சல் போட்டு அழுதான்.

"பாசாங்கு செய்கிருயா, படவாப் பயலே" கொண்டு வா, பிரம்பு!" என்ருர் சப்-இன்ஸ்பெக்டர்.

"இல்லே ஸார்! எனக்கு ஒன்றும் தெரியாது. நான் எச்சில் இலை பொறுக்கிச் சாப்பிடுகிறவன்" என்ருன் பையன்.

"எச்சில் இலையில்தான் இது கிடந்ததா? திருட்டுப் படவாப் பயலே, பொய் சொல்லாதே! கலியாண வீட்டுக்குள் மெள்ள நுழைந்து எடுத்து வந்துவிட்டு மறைக்கிருயா? கொண்டு வா கொழு. நன்ருகக் காய்ச்சிக்கொண்டு வா!" என்ருர் சப்-இன்ஸ்பெக்டர் ஒரு கான்ஸ்டபிளைப் பார்த்து.

இந்தக் காலத்தில் இந்த மாதிரி கொடுமைகள் செய்வதில்லை. வெறும் பயமுறுத்தல் என்பது பையனுக்குத் தெரியுமா? பயந்து நடுநடுங்கினன். பையன் பைத்தியக்காரனைப் போல் விழித்தான். "திருட்டு முழி முழிக்கிருயா?" என்று சப்-இன்ஸ்பெக்டர் பையனை உதைக்கப் போனர்.

அதற்குள் பெரிய இன்ஸ்பெக்டர் வந்துவிட்டார். "என்ன சொல்லுகிருன், திருட்டுப்

பையன்?" என்று அவர் நாற்காலியில் அமர்ந்தார். "தான் திருடவில்லை. தனக்கு ஒன்றும் தெரியாது எச்சில் இலைக்காகப் போயிருந்தேன் என்று சொல்லுகிறான்" என்றார் சப்-இன்ஸ்பெக்டர்.

"சேட் வாக்குமூலத்தில் 'ஒரு வேளை சாப்பிட்ட இலையில் மோதிரத்தைக் கழற்றி வைத்துப் பிறகு மறந்து போயிருக்கலாம். இடது கை விரலில் புண்ணாக இருந்தது. வலது கையிலிருந்து கழற்றி இலையின் மூலையில் வைத்து விட்டுச் சாப்பிட்டேன். பிறகு ஒரு வேளை மோதிரத்தை இலையில் மறந்து வைத்து விட்டேனோ, அல்லது போட்டுக் கொண்டேனோ ஞாபகமில்லை' என்கிறார். பையனை நன்றாக விசாரியுங்கள்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார்.

* * *

பையன் சொல்லுவதை சப்-இன்ஸ்பெக்டர் நம்பவில்லை. முதலில் ஒன்றும் தெரியாது என்று சொன்னவன் பிறகு வேலைக்காரனிடம் கொடுத்து விட்டேன் என்றால் போலீஸார் நம்புவார்களா? முடிவில் ஷராப்புக் கடைக்காரன்மேல் சந்தேகமில்லை என்று தீர்மானித்துப் பையனைக் குற்றவாளிச் சிறுவர் பள்ளிக்கூடத்தில் ஐந்து வருஷம் இருக்கும்படி அனுப்பி விட்டார்கள்.

"ஒன்று சொல்ல வேண்டும், எஜமான்!" என்றான் ஒரு நாள் வேலைக்காரன் வேலாயுதம்.

"என்ன?" என்றார் சேட் கிழவர்.

"நான் பெரிய தப்புச் செய்து விட்டேன் தெய்வம் என்னைத் தண்டிக்கும். நீங்கள் வழி சொல்ல வேண்டும்" என்றான்.

பிறகு, வேலைக்காரன் நடந்ததைச் சொன்னான். "பையனை ஜெயிலுக்கு அனுப்பி விட்டார்களே! அந்தப் பையன் ஒரு குற்றமும் செய்யவில்லை. நான் தான் திருடன்; அவன் எச்சில் இலையை என்னிட மிருந்து கெஞ்சி வாங்கிக் கொண்டவன், இலையில் சோற்றோடு மறைந்திருந்த மோதிரத்தை எடுத்து என்னிடம் கொடுத்து விட்டான். என்னைத் திருட்டுப் புத்தி பிடித்துக்கொண்டது. நான் சின்ன எஜமானரிடம் கொண்டு போய்க் கொடுப்பதற்குப் பதில் மறைத்து வைத்து மறுநாள் ஷராப்புக் கடைச் செட்டியாரிடம் காட்டினேன். அவர் 'நாளைக்கு வா, சொல்லுகிறேன்', என்று வாங்கி வைத்துக் கொண்டார். அதற்குள் போலீசார் கண்டு கொண்டார்கள்" என்றான் வேலைக்காரன்.

"வேலாயுதம்! நம்ம வீட்டில் பதினைந்து வருஷம் இருந்து சாப்பிட்டு விட்டு இப்படிச் செய்தாயே! இது தருமமா? அந்த எச்சில் பொறுக்கிப் பையன் யோக்கியமாக உன்னிடம் மோதிரத்தைக் கொடுத் தானே, எவ்வளவு சத்தியமாக நடந்துகொண் டான்? நீ இப்படிச் செய்து விட்டாயே! அவன் பாவம், இப்போது ஜெயிலில் இருக்கிறானே!" என்றார் லால்ஜி சேட்.

"அதுதான் என்னைத் தொந்தரவு படுத்துகிறது சாமி! எனக்கு என்ன தண்டனையாவது கொடுங்கள்!" என்றான் வேலாயுதம்.

"சரி, ஒரு தண்டனையும் வேண்டாம். போ!" அந்தப் பையனை விடுதலை செய்வித்துவிடப் பார்க்க வேண்டும்" என்றார்.

ஆறு மாதங்கள் கழிந்தபின் பெரிய சிபார்சுகளின் பேரில் பையனுக்கு விடுதலையும் ஆயிற்று. "நான் இனிமேல் திருடமாட்டேன்; நல்ல நடத்தையாயிருப்பேன்" என்று பையனிடம் சிறைச்சாலை அதிகாரிகள் உறுதிமொழி வாங்கிக்கொண்டு அவனை விடுதலை செய்து விட்டார்கள்.

சேட்டு வேலைக்காரன் வேலாயுதம், பையனுடைய அந்த உறுதிமொழிக்கு ஜாமீன் கையெழுத்துப் போட்டான்!

இப்போது பையன் சேட்டுக்கு எண்ணெய் தேய்க்கும் ஆள். ரொம்ப சந்தோஷமாகத்தான் இருக்கிறான்.

"உனக்குச் சீக்கிரம் நல்ல பெண் பார்த்துக் கலியாணம் செய்விக்கிறேன்" என்கிறார் சேட் கிழவர், பையனுக்கு வேடிக்கையாக.

"எனக்கு அது வேண்டாங்கோ!" என்கிறான் பையன்.

"ஏன் வேண்டாமென்கிறாய்? கலியாணம் நல்லதுடா?" என்கிறார் கிழவர்.

# உடலும் நிழலும்

"மறு பிறப்புக் கொள்கை ஒரு குருட்டு நம்பிக்கைதானே? இதற்கு ஸையன்ஸில் ஒரு ஆதரவும் இல்லையே?" என்றார் ராமச்சந்திரபுரம் உயர்தரப் பள்ளியின் ஹெட்மாஸ்டர் சிவப்பிரகாச முதலியார் அவர்கள்.

"மறு பிறப்புக் கொள்கை ஒரு சமய நம்பிக்கையேதான்; ஸையன்ஸ் அல்ல. சில விஷயங்களில் ஸையன்ஸ் பிரவேசிக்க நியாயமில்லை. ஸையன்ஸின் வரம்பாக ஒரு 'ஐரன் கர்ட்டன்' உண்டு. அந்த எஃகுச் சுவருக்கு அப்பாலுள்ள விஷயம் ஸையன்ஸுக்குச் சம்பந்தமில்லை நம்பிக்கையைத் தவிர அதற்கு வேறு பிரமாணம் இல்லை. ஸையன்ஸுக்குள் சமயக் கொள்கைகள் பிரவேசிக்கவும் சமயக் கொள்கைகளுக்குள் ஸையன்ஸ் பிரவேசிக்கவும் அதிகாரம் கிடையாது" என்றார் மகாலிங்கம் பிள்ளை.

மகாலிங்கம் பிள்ளைக்குச் சுமார் எண்பது வயது. போலீஸ் இன்ஸ்பெக்டராக இருந்து இப்போது 'பிஞ்சின்' வாங்கி வருகிறார்.

"சுத்தக் குருட்டு நம்பிக்கை 'ஸுபெர்ஸ்டிஸ்ஷன்' களுக்கெல்லாம் நாம் ஆதரவு தந்து விட்டால் தேசம் பாழாகத்தான் போகும். பகுத்தறிவுக்கு இடமில்லாமல் வர வர எல்லாம் மிக மோசமாகப்

போய்க் கொண்டு வருகிறது" என்றார் சிவப் பிரகாசம்.

"குருட்டு நம்பிக்கை என்றால் என்ன? எனக்கு விளங்கவில்லை. நம்பிக்கை என்று சொன்ன பிறகு கண்ணுள்ளதும் கண்ணில்லாததுமாக இரண்டு விதம் ஏது? பக்திக்கு வெளி நோக்கும் கண்கள் கிடையாது. எல்லாம் நம்பிக்கையே யொழிய வேறில்லை" என்றார் மகாலிங்கம் பிள்ளை.

"உம்முடைய அனுபவத்தில் ஏதேனும் மறு பிறப்புக் கொள்கைக்குச் சாதகமாக நீங்கள் கண் டிருக்கிறீர்களா, சொல்லுங்கள். வெறும் பேச்சும் பழைய கண்மூடி சாஸ்திரமும்தானே?" என்றார் சிவப்பிரகாச முதலியார்.

"இல்லை, சிவப்பிரகாசம். இல்லை. நீ சிறு வயது. நான் கிழவன். நான் சொல்லும் ஒரு கதையைக் கேள். அது சுய சரிதம். அந்தக் காலத்தில் நான் உத்தியோகத்திலிருந்தேன்".

"சொல்லுங்கள், சொல்லுங்கள். கதை கேட்க நான் எப்போதும் தயார்" என்றார் சிவப்பிரகாச முதலியார்.

"ஒரு சமயம் நான் திருப்பதிக்குப் போயிருந் தேன். அங்கே ஒரு பைராகியைக் கண்டேன். பேச்சு பல விஷயங்களைப்பற்றி நடந்தது. பைராகியின் வேஷம் எனக்குப் பிடிக்கவில்லை. ஆயினும் அவன் பேச்சு அன்பு நிறைந்த அமுதம்போல் இருந்தது; சொல்ல முடியாத ஒரு வகையில் என் உள்ளத்தைக்

கவர்ந்தது. வெகு நேரம் பேசிக்கொண்டேயிருந்தோம். பைராகி என் கையை நீட்டச் சொன்னான். ரேகை பார்த்து ஜோஸியம் சொல்லுவானோ என்று எண்ணிக் கையை நீட்டினேன். அவன் தன் இடுப்பில் செருகியிருந்த ஒரு டப்பியை எடுத்துத் திறந்து ஒரு குளிகையை என் கையில் வைத்து, "வாயில் போட்டுக்கொள்" என்று சொன்னான்.

நான் தயங்கினேன். "உன் மாரடைப்புக்கு மருந்து. தைரியமாக மென்று விழுங்கு" என்றான்.

எனக்கு அக்காலத்தில் ஒரு கெட்ட வியாதி இருந்தது. திடீர் என்று மாரடைப்பு அவ்வப்போது வந்து கஷ்டப்படுவேன். இது முடிவில் என்னைக் கொல்லும் என்று சில வைத்தியர்கள் சொல்லி வந்ததால் நான் அதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். 'இதை எப்படி பைராகி அறிந்தான்? நான் ஏதும் சொல்லவில்லையே?' என்று வியந்தேன். ஒரு வேளை என் முகக் குறியினால் கண்டு கொண்டானோ என்று சந்தேகப்பட்டேன்.

"யோசனை செய்யாதே. வாயில் போட்டு மென்று விடு" என்று மறுபடியும் சொன்னான் பைராகி.

அவன் முகத்தில் வீசிய அன்பு என்னை வசீகரித்தது. குளிகையை வாயில் போட்டு மென்றேன். கசப்பிலும் கசப்பு, அதைப் பொறுக்க முடியாமல் அவனை நிமிர்ந்து பார்த்தேன்.

அப்போது நல்ல வெயில். பிற்பகல் மணி மூன்று பைராகியின் நிழல் பாறையில் நன்றாக நீண்டு

கிடந்தது. விந்தையே விந்தை! நிழலில் பைராகியின் உருவமில்லை. என் தாய் இறந்து இருபது வருஷங்கள் ஆகியிருந்தன. அவள் தோன்றினாள், அந்த நிழலில்!

"அம்மா!" என்று என்னையும் அறியாமல் கதறி விட்டு மெய்ம்மறந்தேன்.

பிறகு நினைவு வந்ததும் அங்கேயே நின்றிருந்த பைராகி மறுபடியும் பேச ஆரம்பித்தான்.

"மாரடைப்புத் தீர்ந்ததா?" என்று கேட்டான். வலி நின்று விட்டது என்று சமிக்ஞை செய்தேன்; பேசமுடியவில்லை.

"அப்பனே! இந்த ஜென்மத்தில் நான் இந்த உடலில் இருக்கிறேன். சென்று போன பிறப்பில் நான் இருந்த உடலை நீ இப்போது கண்டாய். அது இந்த மருந்தின் சக்தி. தாய் யார்? மகன் யார்? உலகம் எல்லாம் ஆடும் நிழல்கள். பரம்பொருள் ஒன்றே உண்மைப் பொருள். அதுவே பலவாகக் காட்டிக் கொள்கிறது. மனம் கலங்காதே! இந்தா!" என்று மற்றும் நான்கு குளிகைகளை ஒரு வாழைப் பட்டையில் வைத்து மடித்துக் கொடுத்தான்.

"உன் மாரடைப்புக்கு இது மருந்து. மிக்க அவசியம் நேரிட்டபோது வாயில் ஒரு குளிகை போட்டு மென்று விழுங்கிவிடு. வலி நின்று போகும். மருந்து வாயிலிருக்கும் வரையில் உன் முன் உள்ள நிழல்கள் அந்த அந்த உயிரின் முன் ஜென்மத்தைக் காட்டும். அதைப் பார்த்துக் கலவரப் படாதே. முன் ஜென்மங்கள் உயிர்களை நிழல் போல் தொடர்ந்தே வருகின்றன" என்றான்.

இதைச் சொல்லிவிட்டு அவன் அங்கிருந்து எழுந்து போனான். மறுபடி திரும்பி வந்து, "ஐந்து மாத்திரை உட்கொண்டபின் வியாதி முற்றிலும் நீங்கிப்போகும். ஒரு தடவை கண்டதை மறுபடியும் காணமாட்டாய். தொண்ணூறு வயது வரையில் 'பிஞ்சின்' வாங்கி வருவாய்" என்று ஆசீர்வதித்து, பைராகிகள் கூட்டத்தில் மறைந்தான்.

வெகு நாட்கள் வரை மாரடைப்பு வரவில்லை. மருந்தையும் மறந்துவிட்டேன். மத்தியானம் தூங்கி எழுந்ததும் குடிப்பதற்காக வேலைக்காரன் எனக்காக வைத்திருந்த பாலை ஒரு நாள் பூனை குடித்துவிட்டது. குடித்து விட்டு நக்கி நக்கிக் கிண்ணத்தைக் கீழே உருட்டினதும் சத்தத்தைக் கேட்டு இன்னதாயிற்று என்று தெரிந்துகொண்டேன்.

பூனையின் பேரில் அடங்காக் கோபம் கொண்டேன். கோபம் ஏறினதும் திடீர் என்று மாரடைப்பு வந்தது. அப்படியே நாற்காலியில் சாய்ந்தேன். கால்மணி நேரம் ரொம்பவும் கஷ்டப்பட்டேன். பிறகு பைராகி தந்த குளிகை ஞாபகத்துக்கு வந்தது. எழுந்து அதைத் தேடியெடுத்து ஒரு குளிகையை வாயில் போட்டுக்கொண்டு மென்றேன்.

அச்சமயம் பூனை தான் செய்த குற்றத்தைக் கொஞ்சமும் நினையாமல் என்னிடம் கொஞ்சிக் கொண்டு வந்தது. அதற்குள் என் கோபமும் தணிந்து விட்டிருந்தது. சிரித்தேன். குளிகையை வாயில் போட்டு மென்றதும் ஒருவிதக் குளிர் தட்டிற்று. எழுந்து வெளியே வெயிலுக்குச் சென்றேன்.

பூனையும் என்னுடன், "மியாவ்! மியாவ்!" என்று கூவிக்கொண்டு வந்தது. திரும்பிப் பார்த்து அதன் நிழலைக் கண்டேன்.

* * *

பூனையை அப்படியே எடுத்து அணைத்துக் கொண்டு முத்தமிட்டேன். நிழலில் நான் கண்ட உருவம் சிறுவயதிலேயே இறந்துபோன என் மனைவி யின் உருவம். "எனக்கு வைத்திருந்த பாலைக் குடித் தாயா?" என்று மகிழ்ந்தேன். என் ஆனந்தத்தை யாருக்குச் சொல்வேன்? எப்படிச் சொல்வேன்?

* * *

கையிலிருந்த மூன்று குளிகைகளையும் மிக்க ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வைத்தேன். மறுபடி யும் ஒரு குளிகை வாயில் போட்டு மென்று மிக்க ஆசையோடு பூனையின் நிழலைப் பார்த்தேன். பூனை நிழலே யன்றி என் காதல் மனைவியின் உருவம் காணுமல் வருந்தினேன்! பைராகி சொல்லியி ருந்ததை மறந்து விட்டிருந்தேன். இப்போது நினை வுக்கு வந்தது. 'எந்த உயிரின் முற்பிறப்பையும் ஒரு தடவையே காண்பாய்; அதன் பின் குளிகையை வாயினுள் போட்டுக் கொண்டாலும் ஒரு தடவை கண்டதை மறுபடி காணமாட்டாய்' என்று அவன் சொல்லியிருந்தது நினைவுக்கு வந்தது!

அன்று முதல் எனக்கு அந்தப் பூனையில் அதன் பூனை உருவம் மறைந்து விட்டது. அதன் குரலும், பார்வை என் உள்ளத்தை உருக்கும் அசரீரிக் குரலும் பார்வையுமாகி விட்டன. பிறகு ஒரு வருஷம்

கழித்து, பூனைக்கு நோய் கண்டு இறந்துவிட்டது. பைத்தியக்காரனைப்போல் அழுதேன். என் புழக் கடையில் குழி தோண்டி அதை அடக்கம் செய்து, அந்த இடத்தில் ஒரு வேப்பஞ் செடி நட்டு அந்தச் செடியில் என் காதல் மனைவியைக் கண்டு திருப்தி யடைந்தேன்.

* * *

பல ஆண்டுகள் கழிந்து விட்டன. சம்பளப் பணத்திலிருந்து மிகுதி செய்து கொஞ்சம் சேர்த்து வைத்தேன். சேர்க்கச் சேர்க்கப் பண ஆசை அதிகரித்தது. காசிவிஸ்வநாதன் என்ற ஒரு அயோக்கியனை நம்பினேன். நல்ல வட்டி நான் போட்டுத் தருகிறேன் என்று என்னை வசீகரித்து என் பணத்தைப் பெற்றுக் கொண்டு மோசம் செய்து விட்டான். பக்கத்து ஜில்லாக்கள் எல்லாம் தேடி அவனைக் கண்டுபிடித்தார்கள். 'அவனை அரஸ்டு செய்யாமல் ஆளை என் முன் கொண்டு வாருங்கள்' என்று என் போலீஸ் நண்பர்களுக்குச் சொல்லி யிருந்தபடி பிடித்துக் கொண்டு வந்தார்கள். எப்படியாவது பணத்தைத் திருப்பிக் கொடுக்கச் செய்யலாம் என்பது என் யோசனை.

“மன்னித்து விடுங்கள், மகாராஜா! நான் செய்தது பெரும் தவறு. ஆனல் என் குடும்ப நிலையே இதைச் செய்யத் தூண்டிற்று” என்று தன் குடும்பத் தொல்லைகளைச் சொல்ல ஆரம்பித்தான்.

எனக்கோ கோபம் ஆவேசமாகப் பொங்கிற்று. காலிலிருந்த செருப்பை எடுத்து அயோக்கியப் பயலை நன்ருகப் புடைக்க வேண்டுமென்று எழுந்தேன்.

அவன் ஓடினன். கான்ஸ்டபிள்கள் துரத்திக் கொண்டுபோய் அவனைப் பிடித்தார்கள். நான் நான்கு அடி வைப்பதற்குள் பொறுக்க முடியாத மாரடைப்பு வந்துவிட்டது. பைராகியின் குளிகையைத் தேடி எடுத்து வாயில் போட்டுக் கொண்டு மோசக்காரக் காசிவிசுவநாதனைக் கான்ஸ்டபிள்கள் பிடித்து நிறுத்தி யிருந்த இடத்துக்குப் போனேன். அவன் நிழலில் யாரைக் கண்டேன் என்று எண்ணுகிருய்? என்னைப் பெற்ற தகப்பன் அந்த நிழலில் தோன்றினன். என் தலை கிறுகிறு என்று சுழன்றது. என் தகப்பனர் என்னை மோசம் செய்தார்! தகப்பனருக்கு நான் தீர்க்க வேண்டிய கடனை இப்படியா தீர்க்க வேண்டும்?

"இந்தப் பயலை விட்டுவிடுங்கள். தொலையட்டும்! என்று சொல்லிவிட்டுத் திரும்பினேன். தகப்பனர் நினைவு வந்ததும் நான் அவருக்குச் செய்த அபராதங்கள் எல்லாம் என் மனத்தை வாட்டின.

* * *

நான் ராமநாதபுரம் ஜில்லாவுக்கு மாற்றப் பட்டேன். அப்போது அந்த ஜில்லாவில் ஒரு பெருங் கலகம் நடந்து கொண்டிருந்தது. பல கிராமங்களில் முஸ்லீம்களும் மறவர்களும் ஒருவரை யொருவர் குத்தியும் கொன்றும் வீடுகளுக்குத் தீ இட்டும் அக்கிரமங்கள் செய்து வந்தார்கள். அதிகாரிகளுக்கு இது பெருங் கவலையை உண்டாக்கிற்று. கலகத்தை அடக்கும் கடினமான வேலையிலிருந்தார்கள். கலகக்காரர்கள் அடங்குவதற்கு ஒரு மாதமாயிற்று.

ஒரு நாள், அப்போது நான் சாத்தான்குளம் கிராமத்தில் இருந்தேன். ஜில்லா கலெக்டரும் அவ் விடம் முகாம் போட்டிருந்தார். சில கலகக் கேசுகள் விசாரணை நடந்தது. அடுத்த நாள் ஞாயிற்றுக் கிழமையானபடியால் அந்தக் கிராமத்துப் பெரிய ஏரி உள் வாயில் கொக்கு வேட்டைக்குப் போகலாம் என்று கலெக்டர் சொன்னார். நான் சுத்த சைவம். ஆனாலும் கலெக்டர் சொன்னதை எப்படி மறுக்க முடியும்? 'சரி' என்று ஒப்புக்கொண்டேன்.

காலை ஏழு மணிக்கு, காப்பி பலகாரம் செய்து விட்டுப் புறப்பட்டோம். மேலே பறந்துகொண் டிருந்த ஒரு கொக்கைக் கலெக்டர் சரியாகக் குறி வைத்துச் சுட்டார்.

நானும் சுட்டேன். நான் சுட்ட கொக்கு கீழே இறங்கி ஒரு புதருக்குள் மறைந்தது. சேவகன் உள்ளே புகுந்து அடிப்பட்ட கொக்கைப் பிடித்து எடுத்து வந்தான். உயிருடனே இருந்தது. குண்டு அதன் சிறகு ஒன்றைக் காயப்படுத்தி யிருந்தது. என் கையால் ஒரு பறவையைச் சுட்டது இதுவே முதல் தடவை. அதன் கண்களைப் பார்த்தேன். உள்ளத் தில் எனக்குப் பொறுக்க முடியாத வேதனை உண்டா யிற்று.

"மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வமகம:
சாச்வதீஸ் ஸமா!"

"துஷ்ட வேடனே! நீ ஆயுள் முழுதும் ஓய்வும் சுகமும் இன்றி அலைந்து திரிவாயாக" என்று வால்மீகி ரிஷி பறவையைக் கொன்ற வேடனுக்கிட்ட சாபம்

என்மேல் பாய்ந்தது போல் உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது!

அன்று காலையிலிருந்தே என் உடம்பு சரியாக இருக்கவில்லை. மாரடைப்பு வரும் என்று பயந்து கொண்டே இருந்தேன். கிராமத்துக்குத் திரும்பினோம். சேவகன் நாங்கள் சுட்ட கொக்குகளை ஒரு மூங்கில் தடியில் மாட்டித் தோளின்மேல் வைத்துக் கொண்டு முன்னாலே சென்று கொண்டிருந்தான். ஒற்றையடிப் பாதையில், நாங்கள் அவனைத் தொடர்ந்து பின்னால் நடந்து சென்று கொண்டிருந்தோம்.

நான் காலையில் பயந்தபடியே மாரடைப்பு வந்துவிட்டது. வரவர வலி அதிகமாகி, பொறுக்க முடியாமல் தரையில் உட்கார்ந்தேன். ஜோபியில் குளிகை வைத்திருந்ததை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு மென்றேன். என் சேவகன் முன்னால் சென்று கொண்டிருந்தவன் என்னைப் பார்த்து, "என்ன, என்ன?" என்று பக்கத்தில் வந்து விசாரித்தான். அப்போது அவன் நிழல் என்முன் நீண்டு கிடந்தது. அதை நான் கவனிக்கவில்லை. அவன் தோளில் நீட்டிய மூங்கில் நிழலைத்தான் பார்த்தேன். குற்றுயிராயிருந்த பறவையின் நிழலைக் கண்டேன், எனக்கு உயிர் போகும்படியான துக்கம் மேலிட்டது.

* * *

எனக்கு இருந்தது ஒரே குழந்தை. அதன் முகத்தையும் சிரிப்பையும் கண்டு என் அருமை மனைவி மறைந்த துக்கத்தை ஒருவாறு மறந்திருந்



தேன். குழந்தையை நானே தாயும் தகப்பனுமாகி வளர்த்து வந்தேன். நான்காவது வயதில் அந்தக் குழந்தைக்கு விஷ சுரம் கண்டு ஒரு மாதம் படுத்த படுக்கையாகக் கிடந்தது. மருந்தெல்லாம் செய்து பார்த்தும் பயனில்லாமல் போயிற்று. கடைசி ராத்திரி நினைவு தப்பி வெகு நேரம் கழித்து மெதுவாகப் பேசினாள். "அப்பா" என்றாள்.

"என் கண்மணி!" என்றேன்.

"யாரோ இழுத்துப் போகிறார்களே!' என்றாள்.

"அம்மா, ஒன்றுமில்லை; பயப்பட வேண்டாம்" என்று சொல்லிக் குழந்தையை முத்தமிட்டேன். அடுத்த நாள் உயிர் நீத்தது.

என் அருமைக் குழந்தை கால்கள் கட்டுப்பட்டு, சேவகன் கோலில் தொங்குவதை நிழலில் கண்டேன்! கீழாகத் தொங்கியிருந்தும் என்னைப் பார்த்துக் கொண்டேயிருந்தது குழந்தை. அதன் கண்களில் அப்போதும் கோபம் இல்லை. அன்பே நீராகப் பெருகிக் கொண்டிருந்தது. ஜுரத்தில் நான் கண்ட கண்களாகவே இப்போதும் கண்டேன்.

"ஐயோ என் தங்கமே!" என்று உன்மத்தன் போல் கத்தினேன். தரையில் படுத்துப் புரண்டேன்.

"என்ன இன்ஸ்பெக்டர், என்னவாயிற்று ?" என்று கலெக்டர் கவலையுடன் விசாரித்தார்.

"ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை" என்று சொல்லி எழுந்தேன். அதற்குள் நிழலில் கண்ட காட்சியும் கலைந்து மறைந்து போயிற்று. பறவை இறந்து விட்டது.

என் மாரடைப்பு வலி தீர்ந்தது. ஆனால் என் அருமைக் குழந்தையை மறுபடியும் கொன்றேன். என்ன தண்டனை என் பாவத்தைக் கழுவி அலம்பக் கூடும்?

ஒரு மாதம் கழித்து ஒரு பொதுக் கூட்டம் போடப்பட்டது. முகமதியர்களும் மறவர்களும் எல்லோரும் கூடியிருந்தார்கள். நானும் ஜில்லா கலெக்டருடன் மேடையில் உட்கார்ந்திருந்தேன்.

“அன்பர்களே! என் பேச்சைக் கேளுங்கள்” என்று ஒரு முஸ்லிம் கிழவனார் முதலில் பேசினார். “சண்டை பிடிப்பதில் ஒரு பயனும் இல்லை; நாம் அனைவரும் அண்ணன் தம்பிகள். நடந்து போனது நடந்து போயிற்று. அதை மறந்து விடுவோம். ஆண்டவன் செயலை யாரே தடுக்க முடியும்?”

பிறகு மறவர் இனத்தைச் சேர்ந்த ஒரு வயோதிகரும் பேசினார்.

“ஐயன்மீர்! முன் ஜன்மத்தில் நாம் யாராக இருந்தோமோ, அடுத்த ஜன்மத்தில் யாராகப் பிறப்போமோ? யாருக்கும் தெரியாது. யாரும் எந்தக் குலம், எந்த ஜாதி என்பது நிச்சயமில்லை. நாம் அனைவரும் ஆண்டவன் மக்கள். சண்டை வேண்டாம்” என்றார் மறவக் கிழவர்.

குளிகை வாயிலாக நான் கண்டதும், படிப்பும் பண்பாடும் இல்லாத இந்தக் குடியானவக் கிழவர் சொன்னதும் ஒன்றாகவே இருந்தன.

‘கிழவர் சொன்னது முற்றிலும் என் கண்ணாலேயே பார்க்கப்பட்ட உண்மை’ என்று எழுந்து

சொல்ல எண்ணினேன். ஆனால் என் கையில் இருந்த குளிகைகள் தீர்ந்து போய் விட்டபடியாலும் என் பேச்சை யாரும் நம்பமாட்டார்கள் என்று தெரிந்திருந்த படியாலும், அந்த எண்ணத்தை அடக்கிக்கொண்டேன்.

அடுத்த மாதம் லீவு வாங்கிக் கொண்டு திருப்பதிக்குப் போனேன். எவ்வளவு தேடியும் அந்த பைராகி சிக்கவில்லை.

* * *

"சிவப்பிரகாசம்! உங்கள் படிப்புக்கு அடங்காத விஷயங்கள் உண்டு" என்றார் மகாலிங்கம்.

"ஆம்! ஷேக்ஸ்பியர் கூட அப்படியே ஓர் இடத்தில் சொல்லியிருக்கிறார்" என்றார் ஹெட் மாஸ்டர்.

# சீதாதேவியின் அவதாரம்

ஒரு சமயம் சீதேவி, நாதன் மகாவிஷ்ணுவைக் கேட்டாள்:

"நாதா! துக்கம், துயரம், கஷ்டம் என்று இடைவிடாமல் மண்ணுலகத்திலிருந்து புலம்பல் கேட்கிறதே, ஏன் இவ்வாறு துயரப்படுகிறார்கள்? எல்லாம் உம்முடைய விளையாட்டு. மாயை என்பதை இவர்கள் அறியவில்லையா?"

[இது ரொம்ப நாட்களுக்கு முன் நடந்த சம்பாஷணை. அப்போது ராமாயணம் கூட இன்னும் நடைபெறவில்லை. அதற்கு முன்பு நடந்த பேச்சு.]

உலகநாதன் முகத்தில் முறுவல் பூத்தது. மெள்ளப் பதில் சொன்னார்:

"கண்ணே! நீ கேட்கிறது எனக்குக் கொஞ்சம் வியப்பாக இருக்கிறது. நான் எண்ணினேன். இந்த விஷயங்கள் எல்லாம் உனக்குத் தெரியுமென்று!"

"இல்லை, ஆண்டவனே! இது எனக்கு விளங்கவில்லை. அறிவு பெற்ற மக்கள் ஏன் துக்கப்படுகிறார்கள்? மாயையின் விளையாட்டு என்று அறிந்தவுடன் துக்கம் தீர்ந்து போகுமல்லவா? எத்தனையோ ஞானிகள் விஷயத்தை நன்றாக எடுத்து மண்ணுலகத்தில் மக்களுக்கு விளக்கியிருக்கிறார்களே. உபநிஷத்து மந்திரங்களும் அழகான ஓசையோடு

ஓதி வருகிறார்களே? தினமும் நம் காதில் தேன் போல் ஒலிக்கிறதே! அப்படியிருக்க ஏன் இன்னும் இந்தத் துக்கமும் புலம்பலும்?"

இதைக் கேட்டு ஒரு கனம் மகாவிஷ்ணு பேசாமல் மௌனமாக இருந்து பிறகு சொன்னார்:

"ஒரு வேலை செய்வோம். கண்ணே! தேவர்களும் எனக்கு ஒரு ஜோலி வைத்திருக்கிறார்கள். மண்ணுலகத்தில் நான் சில காலம் அவர்களுக்காகப் போய் இருக்க வேண்டியதாக இருக்கிறது. நீயும் கூட வந்தால் நீ கேட்கும் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளலாம். வாய்மொழி விளக்கம் என்னத் துக்கு? நீயே எல்லாம் கண்டு கொள்வாய். என்னுடன் பூவுலகத்திற்கு வரச் சம்மதமா?"

இவ்வாறு உலகநாதன் கேட்டதும் மகாலக்ஷ்மிக்கு அடங்காத மகிழ்ச்சி. "இதையும் கேட்க வேண்டுமா? கூடச் செல்வதற்கு அனுமதி தந்தால் போதுமே; நான் எப்போதும் தயார்!" என்றாள்.

அது வரையும் மகாவிஷ்ணு அவ்வப்போது மண்ணுலகம் சென்ற போதெல்லாம் சீதேவியைக் கூட அழைத்துப் போனது கிடையாது "நான் போய் உடனே திரும்பி விடுவேன்; இங்கேயும் இருந்துகொண்டே இருப்பேன்" என்று சொல்லி விட்டு, அப்படியே பூரணமாகக் கீழே அவதரிப்பார். பூரணமாகவே மகாலக்ஷ்மியுடனுமிருப்பார். தம் யோக மாயையின் பலத்தால் பகவான் இப்படிச் செய்து வந்தார்.

இப்போது, "வா, பூவுலகத்திற்கு. இருவரும் போவோம்" என்றதும் சீதேவிக்கு மிக உற்சாகம்.

"சரி, போவோம்!" என்ருள்.

* * *

தேவலோகத்தில் ஒன்று எண்ணிஞல் போதும். உடனே அது நிகழ்ச்சியாகக் காய்த்துப் பழுத்து விடும்.

ஜனக மகாராஜன் ஏர்பிடித்த நிலத்தை உழுது யாக பூமி தயார் செய்து கொண்டிருந்தான். (கலப்பை பிடித்து உழுவதும் அந்தக் காலத்து ராஜாக்கள் செய்வார்கள்.) அப்போது உழுத மண்ணில் ஒரு புத்தம் புதிய பிரசவமான குழந்தையைக் கண்டான். சீதேவியே குழந்தையாகப் பிறந்தால் குழந்தையின் அழகைச் சொல்ல வேண்டுமா? ஜனகன் அடங்காத மகிழ்ச்சி யடைந்து பரவசமானுன். குழந்தையை அப்படியே வாரி எடுத்து அரண்மனைக்குக் கொண்டுபோய், "இதோ! பூதேவி நமக்குத் தந்த குழந்தை" என்று மனைவியிடம் தந்தான். குழந்தை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது. அவள்தான் சீதை.

அதே சமயம், பாவம், தசரதன் அயோத்தியில் புத்திர சம்பத்து இல்லாமல் வருந்தி, அதற்காக ஒரு பெரிய வேள்வி செய்வித்தான். யாகத்தீயிலிருந்து ஒரு தேவதை கிளம்பிவந்து, பாயசம் நிறைந்த ஒருபொன் பாண்டத்துடன் அரசன் எதிரில் நின்றது.

"இதை மனைவிகளுக்குத் தந்து அவர்களை அருந்தச்செய். புத்திரப் பேறு பெறுவாய்" என்றது.

தசரதன் தன் ஆசை நிறைவேறிற்று என்று மகிழ்ந்து வணக்கத்துடன் பாயசத்தைப் பெற்றுக் கொண்டு பாத்திரத்தைக் கீழே வைக்காமலும் வேறு பாத்திரங்களில் பாயசத்தைக் கொட்டி அளக்காமலும் தன் மனைவிகளுக்குப் பெரியவள் சிறியவள் என்கிற 'மரியாதை'யைக் கவனித்துப் பங்கிட்டுக் கொடுத்தான். மகா புனிதமான யாகப் பிரசாதமல்லவா? அதை வேறு பாத்திரங்களில் ஊற்றுவது சரியல்லவென்று இவ்வாறு செய்தான்.

முதலில் கௌசல்யையிடம் சென்று, இதில் பாதி நீ அருந்து!" என்று தந்தான்.

அவளும் அவ்வாறே செய்து மிச்சப் பாயசத்துடன் பாத்திரத்தைத் தசரதனிடம் கொடுத்தாள். எல்லா மனைவிகளுக்கும் புத்திரோற்பவமாக வேண்டும் என்று அரசனுக்கு ஆசை.

ஆகவே, சுமத்திரையிடம் சென்று, "இதில் பாதி நீ அருந்து" என்றான் தசரதன்.

சுமித்திரை மிக்க அறிவாளி; அடக்கம், பக்தி எல்லாம் படைத்த சாந்த 'ஆத்துமா.' "கௌசல்யைக்குத் தந்தாயிற்றா?" என்று கேட்டுத் தெரிந்து கொண்டு, இருந்த பாயசத்தில் பாதி குடித்துவிட்டு மிகுதிப் பாயசத்துடன் பாத்திரத்தைக் கணவனிடம் தந்தாள், கைகேயிக்கும் தரவேண்டுமென்று.

தசரதன் அதைப் பெற்றுக்கொண்டு கைகேயியிடம் சென்று, "நீங்கள் மூவரும் குழந்தைகள்

பெற்று, வாழ்க்கையின் சுகத்தை நான் அடைய வேண்டும். வேள்வியில் கிடைத்த பிரசாதம், இதில் பாதி அருந்து'' என்ருன். மூன்ரும் மனைவி மற்ற இருவரையும்விடக் கொஞ்சம் குறைவு அல்லவா? அதனுல் இவ்விதம் பங்கு செய்தான்.

அவளும் இருந்த பாயசத்தில் பாதி மகிழ்ச்சியுடன் குடித்துவிட்டு, பாத்திரத்தைத் திருப்பிக் கொடுத்தாள். அரசன் மறுபடி சுமத்திரையிடம் சென்று அந்த அரைக்கால் பங்கு மிச்சத்தையும் சுமித்திரையையே அருந்தச் சொல்லிவிட்டு, காரியம் கைகூடிற்று என்று ஆனந்தமாகப் புத்திரப் பேற்றை எதிர்பார்த்த வண்ணமாக இருந்தான்.

காலத்தில் எல்லா மனைவிகளும் சுகப்பிரசவமாகி அழகிய குழந்தைகளைப் பெற்ருர்கள். கௌசல்யைக்குச் சக்கரவர்த்தித் திருமகன் ராமசந்திரன் பிறந்தான். கைகேயி பரதனைப்பெற்ருள். சுமித்திராதேவி இரு தடவையாகப் பாயசம் குடித்தபடியால் இரண்டு அழகான குழந்தைகளைப் பெற்ருள். இரட்டைக் குழந்தைகளில் லக்ஷ்மணன் ஸ்ரீராமனிடம் மிகுந்த சேர்க்கையுடன் வளர்ந்தான். முதலில் குடித்த பாயசத்தின் பயன் லக்ஷ்மணன். கைகேயி அருந்திய மிச்ச பாயசத்தை அருந்தியதன் பயனுகப் பிறந்தவன் சத்துருக்கனன். இவன் பரதனுக்குப் பிராண சினேகிதனுக வளர்ந்து வந்தான்.

* * *

பிறகு நடந்த கதையெல்லாம் உலகத்துக்கு வால்மீகி ரிஷியும், கம்ப நாட்டாழ்வாரும், துளசி

தாஸரும், டி. கே. சி. யும் அழகாகச் சொல்லி யிருக்கிறார்கள். சீதை ஸ்ரீராமனுக்கு வாழ்க்கைத் துணையாகச் சேர்ந்தாள். துக்கம் என்ன, துயரம் என்றால் என்ன, கஷ்டம் என்றால் என்ன, என்பதையெல்லாம் அனுபவித்துப் படிக்க அல்லவா பூவுலகில் சீதையாக சீதேவி பிறந்தாள்? பாவம், அதையெல்லாம் நன்றாகவே படித்தாள். வாத்தியார் சொல்லிப் படிக்கவில்லை. நேரில் அனுபவித்து, துக்கப்பட்டு, கஷ்டப்பட்டுப் படித்தாள். துக்கத்தை எழுத்தைக் கூட்டிப் படித்தால் அதன் பொருள் தெரியுமா? அனுபவித்து அனுபவித்து, அலைந்தும் பயந்தும் அவமானப்பட்டும் குடல் நடுங்கியும் இருதயம் உடைந்தும் மண்ணுலகத்து மக்களின் துக்கம் இந்தகையது என்று பூரணமாகச் சீதை படிக்க நேர்ந்தது. ராமாவதாரத்தில் சீதை அனுபவியாத ஒரு துக்கம் உலகத்தில் இல்லை

ஆசைப் பட்டு அடைந்த பதவி ஒரு கணத்தில் கனவுபோல் மறைந்தது. கணவனை விட்டுப் பிரிய இஷ்டமில்லாமல் காட்டுக்கு அவனுடன் சென்றாள். போன இடத்தில் இதுவே போதும் என்று திருப்தியாக இருந்தவளுக்கு அனாவசியமாக ஒரு மோகம் மேலிட்டு, "அந்தப் பொன் மானைப் பிடித்துத் தா" என்று புருஷனை வற்புறுத்தினாள். பக்தியே உருவெடுத்த லக்ஷ்மணனைச் சீதை அநியாயமாகச் சந்தேகித்து அவனைத் திட்டியும் அவமதித்தும் பேசித் தொந்தரவு படுத்தித் துரத்தியனுப்பித் தனியே இருந்த சமயம் பெரிய ஆபத்தில் சிக்கிக் கொண்டாள். ராட்சதனால் தூக்கிக்கொண்டு போகப் பட்டாள்; கதறி யழுதாள். வழியில் பறவை ஒன்று

தைரியமாக அரக்கனைத் தடுத்துத் தாக்கித் தன் உயிரை மாய்த்துக்கொண்டு கீழே விழுந்தது. அதை யும் பார்த்துத் துக்கப்பட்டாள். பிறகு இலங்கையில் சிறையில் கிடந்தாள். ஒரு வருஷம் கழித்தும் துயரம் தீராமல் தன் உயிரை மாய்த்துக் கொள்ளப் போன சமயத்தில் அனுமனைக் கண்டு, "பிழைத்தேன்" என்று மகிழ்ந்தாள்.

எதிர்பார்த்தபடி புருஷன் வந்து அரக்கனைக் கொன்று மீட்சி அடைந்தாள். யுத்தம் முடிந்து அரக்கர் கூட்டம் ஒழிந்தது. உயிரை விடப் பிரிய மான புருஷனை எதிர்பார்த்த வண்ணமாக அசோக வனத்தில் இருந்தவளை ராமன் ஆள்விட்டு அழைத்து வரச் சொன்னான்! அப்படியே போனாள். தனக்கு விளங்காத ஒரு பயத்தோடு போனாள். போனதும் என்ன கண்டாள்? மகிழ்ச்சி பூத்த பூரண சந்திரனைப் போன்ற முகத்தைக் காணவில்லை. கடினமான முக லக்ஷணத்தை மேற்கொண்டவனாகத் தன் கணவனைக் கண்டாள்; தான் அணைத்து அன்பு செய்த ராமன் தான். ஆனால் ஏனோ விபரீதமான மனோ நிலையில் இருந்தான்.

"தருமத்தினின்று நீ பிறழவில்லை என்பதற்கு என்ன சான்று?" என்று கேட்டான்.

இந்தச் சொல்லைக் கேட்டதும் சீதேவியின் அவதாரமான சீதை, "ஆகா! துக்கம் என்பது என்ன என்பதை இப்போது அறிந்தேன்" என்று எண்ணினாள்.

சோதனைத் தீயில் இறங்கினாள். அக்கினி பகவான் சீதேவியைத் தீண்டியதும் பனிபோல்

குளிர்ந்து போய்விட்டான். இந்தச் சத்திய சோதனை வெற்றிகரமாக முடிந்து ஊர் திரும்பினார்கள்.

ஆனால் இன்னும் துயரம் விட்டபாடில்லை. ஊரார் அபவாதம் பேசினார்கள். தீயும் தீண்டாத அந்த உயிரானது கீழ் மக்கள் அபவாதத்தில் மிகுந்த வேதனைப் பட்டது; பற்றி எரிந்தது.

"மக்கள் ஏன் துயரப்படுகிறார்கள்? பொய்யும் மாயமும் ஏன் ஞானிகளையும் பாடு படுத்துகின்றன?" என்றெல்லாம் கேட்டாளல்லவா? அதற்குப் பதில், அழுத்தம் திருத்தமாகச் சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றிச் சீதைக்கு அனுபவமாகக் கிடைத்தது.

இந்தக் கதையை என்னால் சொல்லவும் கஷ்ட மாக இருக்கிறது. சீதை காட்டுக்கு அனுப்பப் பட்டாள். அச்சமயம் கருப்பம் தரித்திருந்தாள். அந்தப் பருவத்தில் மறுபடியும் காட்டைப் பார்க்க வேண்டும் என்ற ஒரு மசக்கை ஆசை சீதைக்குத் தோன்றிற்றும். அது இம்மாதிரி நிறைவேறிற்று!

அவதாரம் முடிந்தது. மாயமும் மோகமும் ஒழிந்த பாற்கடல்.

"ஆண்டவனே! துக்கம் ஏன் என்பதை நன்றாகக் கண்டேன்" என்றாள் சீதேவி.

"மாயத்தின் வேகத்தைக் கண்டு கொண்டேன். இனி மக்களின் புலம்பலைக் கவனிப்பது என் பங்கு. தீர்ப்பது உம்முடைய பங்கு" என்றாள் மீண்டும்.

பகவதி, ஈசுவரி, சீதேவி, லக்ஷ்மி, கௌரி, பார்வதி என்றெல்லாம் பல பெயர்கள் கொண்ட

தேவி ஆண்டவன் சந்நிதியில் நமக்கு நல்ல துணையாக எப்போதும் நிற்கும் கருணைமூர்த்தி. ஆண்டவனுடைய கருணைத் தத்துவமே தேவி.

தேவி பூவுலகில் இறங்கி மக்கள் படும் தீராத துக்கத்தை நேரில் அனுபவித்தவள். பொய்யும் மாயமும் சேர்ந்து வாட்டும் நம்முடைய துயரத்தையும் கஷ்டத்தையும் நன்ருக அறிவாள். ஆகையால் நாம் அதைப்பற்றிப் பயப்பட வேண்டியதில்லை. நாம் மனம் உருகித் தேவியிடம் முறையிட்டால் போதும்.

# கண்ணன் பிழைத்தான்

பாலுவுக்கு வயது நான்குதான் இருக்கும். தாயார் இறந்து போன பையன். தகப்பனார் மாதவ ராயருக்கு அவன் மேல் மிக்க பிரியம். சொன்னபடி கேட்கிறதில்லை என்று மாதவ ராயருடைய இரண்டாம் மனைவியின் தினசரிப் புகார்.

தீபாவளிக்கு முதல் நாள், மத்தியானம் வீட்டை விட்டுப் போனவன் மாலை வெகு நேரமாகியும் பையன் காணவில்லை. துஷ்டப் பிள்ளை எங்கேயோ அலைந்துவிட்டு வருவான் என்று வெகு நேரம் வரையில் எதிர்பார்த்தார்கள். இரவு எட்டு மணியாகியும் வராதபடியால் கவலைப்பட ஆரம்பித்தார்கள். தெரிந்தவர்களுடைய வீட்டுக்கெல்லாம் சொல்லியனுப்பினார்கள். ஒரு தகவலும் தெரியவில்லை. ஊரில் இங்குமங்கும் ஆட்களை விட்டுத் தேட வைத்தார்கள். எங்கும் சிக்கவில்லை. அன்றிரவு 10 மணிக்குப் போலீஸ் ஸ்டேஷனிலும் சொல்லி எழுதி வைக்கப் போனார்கள்

"பையன் உடம்பின்மேல் ஏதாவது நகை இருந்ததா?" என்று இன்ஸ்பெக்டர் சாந்தப்பப் பிள்ளை கேட்டார்.

"ஒன்றுமில்லை. காலில் வெள்ளிக் காப்பு தவிர வேறு ஒன்றுமில்லை" என்றார் மாதவராயர்.

"காப்பு என்ன பெறும்?" என்று இன்ஸ்பெக்டர் கேட்டதற்கு, "போல்வனே; மூன்று ரூபாய்கூட இருக்காது" என்ருர் மாதவராயர்.

* * *

பக்கத்துவீடுகளிலெல்லாம் பட்டாசு சுடும் ஓசை. மாதவராயருக்கு இது பொறுக்க முடியவில்லை. இரவு முழுதும் யாராவது துப்புக் கொண்டு வரமாட்டார்களா என்று ஆசைப்பட்டுக் கொண்டு தூக்கமில்லாமல் கழித்தார்.

"இந்த வேலைக்காரனை வேண்டாம் என்று நான் எவ்வளவு சொல்லியும் நீங்கள் பிடிவாதம் செய்தீர்கள். அவன்தான் ஏதோ செய்து விட்டிருப்பான். அவனைக் கண்டால் எனக்குப் பிடிக்கவில்லை" என்ருள் சீதம்மா.

"அவன் பேரில் ஏன் வீணுகச் சந்தேகப்படுகிருய்? அவன் ராத்திரி எட்டு மணிவரையில் வீட்டில்தானே இருந்தான்? குழந்தையை நாலு மணி முதல் காணவில்லையே?" என்ருர் மாதவராயர். கவலையும் குழப்பமுமாக இருக்கிறவர்கள் இவ்வாறு அர்த்தமில்லாத மணிக் கணக்குகளை எடுத்துச் சொல்வது வழக்கம்.

"தினம் மத்தியானம் மூன்று மணிக்கே வருகிறவன் இன்று ஐந்து மணிக்குத்தான் வீட்டுக்கு வந்தான். 'ஏண்டா இவ்வளவு நேரம்?' என்று கேட்டதற்கு, 'நோன்புக்குச் சாமான் வாங்கக் கடைக்குப் போயிருந்தேன்' என்று ஏதோ சாக்குச் சொன்னுன். எனக்கு அவன்பேரில் சந்தேகமாகத்தான் இருக்கிறது" என்ருள் சீதம்மா.

"மாதவராயரே! அவனைப்பற்றிச் சந்தேகிக்க வேண்டியதுதான். வீட்டிலுள்ள வேலைக்காரர்களின் உளவு இல்லாமல் ஏதும் நடக்கிறதில்லை" என்றார் பக்கத்து வீட்டுக் கோபாலய்யர்.

"கண்ணன் இருப்பது மேலநத்தம் பள்ளத் தெருவு. போலீஸில் சொல்லிப் பார்க்கலாம்" என்றார் வக்கீல் குமாஸ்தா வாசுதேவய்யர்.

இரவு முழுதும் இம்மாதிரி கழிந்தது. காலையில் ஊரெல்லாம் தீபாவளி ஓசை. படார், படார் என்று வெடிகள் வெடிப்பதும் பக்கத்து வீடுகளில் தண்ணீர் எடுத்து ஊற்றும் பாத்திரங்களின் ஓசையுமாக இருந்தது. மாதவராயர் விம்மி விம்மி அழுது, இறந்து போன முதல் மனைவியைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

"ஐயோ! குழந்தை எந்தப் பாதகன் கையில் அகப்பட்டு என்ன கஷ்டப்படுகிறானோ?" என்று துயரம் தாங்காமல் கத்தினார்.

"வந்து விடுவான், அழாதீர்கள்! பகவான் காப்பாற்றுவார்" என்று சீதம்மா சமாதானம் சொன்னாள்.

* * *

போலீஸாருக்கு ஏதோ துப்புக் கிடைத்ததாக மத்தியானம் 12 மணிக்குச் சமாசாரம் தெரிந்தது. "ஸ்டேஷனுக்குப் போய் விசாரித்து வாருங்கள்" என்றாள் சீதம்மா.

மாதவராயருடைய வீட்டில் தோட்ட வேலை செய்து வந்த கண்ணனைப் போலீஸார் லாக்கப்பில்

வைத்திருந்தார்கள். அவன் வீட்டைச் சோதனை போட்டு ஏதோ சில துணிகளும் ஒரு பட்டாசுக் கட்டும் கைப்பற்றி யிருந்தார்கள். துணிகளில் எதுவும் பாலுவினுடையது இல்லை என்று மாதவ ராயர் பார்த்துச் சொல்லி விட்டார்.

பட்டாசுக் கட்டைப் பற்றி மட்டும் பாலுவின் தாய் மாமன் ராமச்சந்திரராயர் திட்டமாக அது பாலுவுக்குத் தாம் முதல் நாள் வாங்கித் தந்த கட்டு என்ருர். இது போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு வெகு திருப்தி தந்தது.

இன்னும் சில விஷயங்கள் போலீஸார் செய்த விசாரணையில் பிறகு வெளியாயின. மாலை நாலு மணிக்குக் கடை வீதியில் பாலுவும் கண்ணனும் சேர்ந்தாற்போல் கிழக்குப் பக்கமாகப் போய்க் கொண்டிருந்ததைச் சிலர் பார்த்ததாகச் சாட்சியம் கிடைத்தது. பாலுவின் கையில் அப்போது ஒரு பட்டாசுக் கட்டு இருந்ததைப் பார்த்ததாகவும் சிலர் சொன்னுர்கள். கண்ணன் குழந்தைக்கு வாழைப் பழம் தந்ததைப் பார்த்ததாகப் பெண் பள்ளிக் கூடத்துச் சேவகக் கிழவன் வேலுப் பிள்ளை சாட்சியம் சொன்னுன்.

கண்ணனைக் கேட்டதில் தனக்கு ஒன்றும் தெரியாது, பையனுடன் கடைத் தெருவில் அன்றையதினம் போனதே கிடையாது என்ருன். வேலுப் பிள்ளையின் சாட்சியத்தைப் பற்றிக் கேட்டதற்கு, "அது பொய். அவன் ஏனே அப்படிச் சொல்லுகிருன்!" என்று சாதித்தானே யொழிய, ஒரு சமாதானமும் சொல்ல

வில்லை. ரொம்பச் சந்தேகத்துக்கு இடம் என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் அபிப்பிராயப்பட்டார்.

* * *

"நாலு உதை கொடுத்தால் எல்லாம் வெளியாகும்" என்றாள் சீதம்மா.

"அதுவெல்லாம் போலீஸார் சரியாகச் செய்வார்கள்" என்றார் வக்கீல் குமாஸ்தா வாசுதேவய்யர்.

மாதவராயர் ஒன்றும் சொல்லவில்லை.

"ஆண்டவனே!" என்றாள் வேலைக்காரி குஞ்சம்மா. வீட்டைக் கூட்டிப் பெருக்கிக்கொண்டே.

* * *

"ஐயோ! என் மகனை அநியாயமாகச் சித்திர வதை செய்கிறார்களே! விரலில் ஊசி ஏற்றுகிறார்களாமே!" என்று கூச்சலிட்டாள் மாதவராயருடைய வீட்டு வாசலில் நின்றுகொண்டு ஒரு கிழவி. கூட அவள் சேலையைப் பிடித்துக்கொண்டு ஒரு குழந்தை நின்று கொண்டிருந்தது.

"அப்படி யெல்லாம் ஒன்றும் செய்ய மாட்டார்கள். சும்மா விசாரிப்பார்கள். அவ்வளவுதான். உண்மையைச் சொல்லி விடுங்கள்" என்றார் வக்கீல் குமாஸ்தா வாசுதேவய்யர்.

"ஐயோ சாமி! ஒரு பாவமும் எங்களுக்குத் தெரியாது. என் மகனைக் கொன்று விடுவார்களே; நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும். எங்களுக்கு வேறு யாரும் திக்கில்லை. இதோ அவன் குழந்தையின் தலைமேல் கையை வைத்துச் சத்தியம் பண்ணிச் சொல்லுகிறேன்" என்றாள் கிழவி. உரக்க அழவும் ஆரம்பித்தாள்.

"சும்மா கத்தாதே! இல்லாவிட்டால் உன்னையும் லாக்கப்பில் அடைத்து விடுவார்கள், தெரியுமா?" என்றார் வாசுதேவய்யர்.

"ஆண்டவனே!" என்று கிழவி அழுதுகொண்டு போலீஸ் ஸ்டேஷன் பக்கம் போனாள்.

* * *

மறுநாள் காலை எட்டு மணிக்கு ஊருக்கு வடக்கே ஒரு குட்டையில் பையனுடைய பிரேதம் தண்ணீரில் மிதந்து கொண்டிருப்பதை மாடு மேய்க்கும் பையன்கள் சிலர் கண்டு போலீஸாருக்குத் தெரியப்படுத்தினார்கள். பிரேதத்தை எடுத்து விசாரணை செய்யப் போலீஸார் மாதவராயரையும் அழைத்துச் சென்றார்கள்.

கழுத்தில் கயிறோ துணியோ சுருக்குப் போட்டு இறுக்கிய அடையாளம் காணப்பட்டது. உடம்பில் வேறு ஒரு காயமும் இல்லை. காலில் காப்புகள் இல்லை; கறுப்பு அடையாளம் மட்டும் நன்றாகக் காணப்பட்டது.

"மூன்று ரூபாய் பெறுமான வளைக்காகப் பச்சைக் குழந்தை மாண்டதே!" என்று கூட்டத்தில் எல்லோரும் துயரப்பட்டார்கள்.

குழந்தை சுருக்கிடப்பட்டு இறந்ததாகவும் வயிற்றில் ஜீரணமாகாத வாழைப்பழம் இருந்ததாகவும் அவயவச் சோதனையில் ஏற்பட்டது. கண்ணன் மேல் கேசு பலப்பட்டது. போலீஸார் தீவிரமாக விசாரணை நடத்தினார்கள். புதிய சில சாட்சிகளையும் பிடித்தார்கள்.

* * *

“பையனுக்கு வாழைப் பழம் வாங்கிக் கொடுத்தாயே, பிறகு அவனை எங்கேவிட்டு எங்கே போனாய்? சொல்” என்று போலீஸார் அதட்டியும் திட்டியும் கண்ணனை ஸ்டேஷனில் விசாரித்தார்கள். கண்ணன் மிரண்ட விழி விழித்தானே யொழிய, ஒருவார்த்தையும் சொல்லவில்லை.

“சரி, இவனை இப்படி நல்ல வார்த்தையில் கேட்டால் சொல்லமாட்டான்; கொண்டுபோய்க் கொட்டடியில் அடை. ராத்திரி நான் வந்து விசாரிக்கிறேன்” என்றார் ஹேட்டு ஷண்முகம்.

ஹேட்டு ஷண்முகத்தைப் பற்றி ஊரில் பிரசித்தம்.

“நோன்புக்குப் பழம் கடையில் வாங்கினேன். குழந்தை கேட்டதினால் ஒரு பழம் தந்தேன். அவனை வீட்டுக்குப் போகச் சொல்லிவிட்டு நான் அவசரமாகக் கடையில் வெல்லமும் எண்ணெயும் வாங்கிக் கொண்டு நேராக என் வீட்டுக்கு மேலநத்தத்துக்குப் போய் விட்டேன். பிறகு எஜமானர் வீட்டுக்கு வந்தேன். ஏன் நேரமாயிற்று என்று அம்மாளும் கேட்டார்கள். ‘நோன்புக்குச் சாமான் வாங்கக் கடைக்குப் போயிருந்தேன், பொழுது ஆய்விட்டது’ என்று சொன்னேன். வேண்டுமானால் அம்மாளைக் கேளுங்கள்” என்றான் கண்ணன்.

* * *

போலீஸ் லாக்கப்பில் கண்ணன் பதினைந்து நாட்கள் இருந்தான். பிறகு குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டுக் கேஸும் விசாரணையாயிற்று.

மாஜிஸ்திரேட்டு ஊருக்குப் புதியவர். கிருஸ்துவர். பத்துச் சாட்சிகள் வாக்குமூலம் கொடுத்தார்கள். குறுக்கு விசாரணையில் தடுமாருமல் நன்ருய்ச் சொன்ஞர்கள். கண்ணன் குழந்தையுடன் மாலை நாலு மணி வரையில் கடைத் தெருவில் இருந்ததும், பையனுக்கு அவன் வாழைப் பழம் கொடுத்ததும், பிறகு பையன் காணுமற் போனதும் எல்லாம் ருசுவாயிற்று. வேலுப் பிள்ளையின் சாட்சியம் மிகவும் திட்டமாக இருந்தது. பாலுவுக்குத் தாம் தந்த பட்டாசுக்கட்டே கண்ணன் வீட்டில் சோதனையில் கைப்பற்றின பட்டாசுக் கட்டு என்று ராமசந்திர ராயரும் உறுதியாகச் சத்தியம் செய்தார். இதன் மேல் வக்கீல்கள் எல்லோரும் கண்ணனைச் செஷன் கோர்ட்டுக்கு அனுப்பித்தான் ஆகவேண்டும் என்று எதிர்பார்த்தார்கள்.

* * *

மாஜிஸ்திரேட்டு நாலு நாள் கழித்துச் சொன்ன தீர்ப்பில், "சாட்சியம் போதாது; தாழ்ந்த ஜாதியை சேர்ந்த ஒருவனுடைய உயிரைப் பற்றி உதாசீனமாகச் சாட்சிகள் உண்மையுடன் பொய்ச் சரக்குக் கொஞ்சம் சேர்த்துச் சொல்லி யிருக்கிருர்கள்; குழந்தை சாகடிக்கப் பட்டதே என்கிற ஆத்திரத்திஞல் இவ்வாறு வாக்குமூலம் கொடுத்திருக்கிருர்கள்" என்று எழுதிக் கண்ணனை விடுதலை செய்து விட்டார்.

இந்தத் தீர்ப்பைக் கொடுத்ததும் ஊரில் பெரிய மனிதர்கள் எல்லோருக்கும் மாஜிஸ்திரேட்டு பேரில் அதிருப்தி. ஜாதித் துவேஷத்திஞல் இவ்வாறு செய்த

தாகத் தூஷித்துப் பேசினர்கள். கண்ணனுக்கு வக்கீலாக நின்று வாதாடிய வீரராகவய்யங்காரைக் கூட எல்லாரும் இகழ்ச்சியாகப் பேசினர்கள்.

* * *

செஷன் கோர்ட்டில் மறு விசாரணைக்காக விண்ணப்பம் போடப் பட்டது. "இறந்த குழந்தை திரும்பி வரப் போகிறதா. வேண்டாம்" என்று மாதவ ராயர் சொன்னர். ஆனல் நண்பர்கள் வற்புறுத்தியதன் பேரில் மனுப் போட்டார். அதன்மேல் கோர்ட்டில் வாதம் நடந்தது.

முடிவில், மாஜிஸ்திரேட்டு கேஸைத் தள்ளியது பிசகு. செஷனுக்கு அனுப்பியிருக்க வேண்டியது என்று ஜட்ஜு உத்திரவிட்டார். ஊரார் எல்லாருக்கும் சந்தோஷம். மறுபடியும் போலீஸார் கண்ணனைக் கைது செய்தார்கள்.

* * *

மூன்று மாதம் கழித்து, செஷன்ஸ் கோர்ட்டில் பூரண விசாரணை நடந்தது. ராமச்சந்திர ராயர் சாட்சிக் கூண்டேறி வாக்குமூலம் கொடுத்தபோது, முதலில் நன்ருகத்தான் சொன்னர். கண்ணன் வீட்டில் கிடைத்த பட்டாசுக் கட்டு பாலுவுக்குத் தாம் கொடுத்த கட்டுத்தான் என்று உறுதியாகச் சொன்னர். பிறகு பல பட்டாசுக் கட்டுகளைக் கலந்து அவருக்குக் காட்டியதும் தடுமாறினர். கோர்ட்டில் வேடிக்கை பார்க்க வந்தவர்களில் சிலர் சிரித்தார்கள். ஜட்ஜு, "ஸைலன்ஸ்" என்று கத்தினதும் சிரிப்பை நிறுத்தினர்கள்.

முடிவில் கேஸில் பலம் இல்லை என்று ஜட்ஜு சொன்னதை ஜூரிமார்களும் ஒப்புக்கொண்டு குற்றம் ருசுவாகவில்லை என்று அபிப்பிராயம் சொன்னார்கள். "நீங்கள் சொன்னது சரி; ஒரு மனிதன்பேரில் குற்றம் எள்ளளவும் சந்தேகமின்றி ஏற்பட்டாலொழியத் தண்டிக்கலாகாது. ஊகம் மட்டும் போதாது" என்று கண்ணனைச் செஷன் ஜட்ஜு விடுதலை செய்து விட்டார்.

※ ※ ※

மூன்று வருஷம் கழிந்தது. ஊரில் விஷயம் வெகுவாக மறந்து போய் விட்டது. மாதவ ராயர் வீட்டிலுங்கூடப் பையன் இறந்த துக்கத்தை மறக்கக் காரணம் ஏற்பட்டது. சீதம்மாவுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. "பாலு திரும்பி வந்து விட்டான்" என்று சீதம்மாவின் தாயார் பிரசவ அறையிலிருந்து மாதவ ராயருக்குச் சொன்னது வீட்டிலுள்ள எல்லாருக்கும் பெரும் சந்தோஷம் உண்டாக்கிற்று.

※ ※ ※

ஒரு நாள் உள்ளூர்ப் போலீஸாருக்குத் திருச்சி போலீஸ் ரிப்போர்ட்டு ஒன்று வந்தது. அதில் ஒரு பழைய திருட்டுக் கூட்டம் லால்குடியண்டை பிடிபட்டதாகவும், அவர்கள் பல இடங்களில் நகைகளைத் திருடுவதற்காகக் குழந்தைகளை ஏமாற்றிய ஆசாமிகள் என்றும், அந்தக் கூட்டத்தில் ஒருத்தி மூன்று வருஷத்துக்கு முன் கிருஷ்ணகிரியில் தீபாவளியன்று கடைத் தெருவில் தனியாகப் போய்க்

கொண்டிருந்த ஒரு பையனைக் கூட்டிப்போய்த் தன் சகாக்களிடம் விட, அவனை அவர்கள் கொன்று கால் காப்புக்களை எடுத்துக்கொண்டு தண்ணீரில் போட்டு விட்டதாக வாக்குமூலம் கொடுத்தாள் என்றும் கண்டிருந்தது.

இந்த விஷயம் மாதவ ராயருக்குப் போலீசார் சொன்னதும், "பார்த்தாயா, சீதா! கண்ணன் ஒரு பாவமும் அறியாதவன் என்று நான் சொன்னேனே! இப்போது அப்படியே நிச்சயமாச்சு பாவம், அவனை ரொம்ப இம்சை செய்தோம்" என்றார்.

"ஆமாம்! அவன் குழந்தைக்கு வாழைப்பழம் கொடுத்தானே, அதற்கு என்ன சொல்லுகிறீர்கள்?" என்றாள் சீதம்மா.

"தன் வீட்டுக்கென்று அவன் வாங்கின வாழைப்பழத்தில் குழந்தைக்கு ஒன்று கொடுத்தான். அதில் என்ன தப்பு? பிறகு அவன் பாட்டுக்கு அவன் தன்னுடைய வீட்டுக்குப் போய்விட்டான். குழந்தை இந்தப் பாதகர்கள் கையில் அகப்பட்டுக்கொண்டது. ஏமாற்றி அழைத்துக்கொண்டு போய்க் கொன்று விட்டார்கள்" என்றார் மாதவ ராயர்.

"குழந்தையின் பட்டாசுக் கட்டு அவன் வீட்டில் அகப்பட்டதே, அது எப்படி?" என்றாள் சீதம்மா.

"அதே பட்டாசுக் கட்டுதான் என்பது என்ன நிச்சயம்? ராமச்சந்திரன் விஷயம் தெரியுமே!" என்றார் மாதவ ராயர்.

பக்கத்தில் இருந்த ராமச்சந்திர ராயரும் பேச்சில் கலந்து கொண்டார்.

"கோர்ட்டுக்குப் போனல் சந்தேகமாகவா பேசுகிறது? சொல்லுவதை அழுத்தமாகத்தான் சொல்ல வேண்டும். ஒரு பட்டாசுக் கட்டைப் போல்தான் இன்னொரு கட்டு என்று அதிகாரியே பார்த்துக் கொள்வான். நான் ஏன் வழவழா என்று சொல்லவேண்டும்?" என்ருர்.

"அப்படியல்ல, ராமச்சந்திர ராயரே, விஷயம் வேறே. அந்த ரகசியம் யாருக்கும் தெரியாது" என்ருர் வீரராகவய்யங்கார். இவரும் மாதவ ராயர் வீட்டுக்கு அன்று வந்திருந்தார்.

"என்ன ரகசியம்? சொல்லும் பார்க்கலாம்" என்ருர் ராமச்சந்திர ராயர்.

"உண்மையில் கண்ணன் வீட்டில் கைப்பற்றிய பட்டாசுக் கட்டு பாலு வைத்திருந்ததுதான்" கண்ணன் பாலுவுக்குப் பழம் கொடுத்து மெள்ள ஏமாற்றிப் பட்டாசுக் கட்டை வாங்கிக்கொண்டு போனது உண்மை. என்னிடம் ஜெயிலில் அவன் இதை ஒப்புக்கொண்டான். 'ஏண்டா இப்படிச் செய்தாய்? ஒரு பட்டாசுக் கட்டுக்காகக் குழந்தையைக் கொல்லலாமா? என்று நான் கேட்டதற்கு, 'குழந்தையை நான் கொல்லவில்லை. பட்டாசுக் கட்டு வேண்டும் என்று என் குழந்தை கேட்டது. அதற்காக அந்தப் பட்டாசுக் கட்டை நான் வாங்கிக் கொண்டு குழந்தையை வீட்டுக்குப் போ என்று கையில் பழம் கொடுத்து அனுப்பிவிட்டு

நான் நேராக மேலநத்தத்துக்கு அவசரமாகப் போய்விட்டேன்' என்று சொன்னன். அவன் சொன்ன கதையை அப்போது நான் நம்பவில்லை; ஏமாற்றுகிருன் என்றும் அவனே கொலைக்குக் காரணம் என்றும் எண்ணினேன். 'இதைக் கோர்ட்டில் சொன்னயானல் கேஸ் பலப்பட்டுப் போகும் கோர்ட்டில் இந்த மாதிரி சொல்லாதே. பட்டாசுக் கட்டைப் பற்றிக் கேட்டால் ஒன்றும் தெரியாது என்று போலீசாரிடம் சொன்னதைப் போலவே கோர்ட்டிலும் சொல்லு' என்று நான் தான் அவனுக்குச் சொல்லிக் கொடுத்தேன்

இவ்வாறு வீரராகவய்யங்கார் சொன்னதும் சீதம்மா, "அட, பாவிகளா! இப்படித்தான் வக்கீல்கள் செய்கிறதா? உண்மையை மறைப்பது ஒரு தொழிலா" என்ருள்.

"இந்த விஷயங்கள் உனக்கு என்ன தெரியும்? வக்கீலிடம் குற்றவாளிகள் என்னவெல்லாமோ சொல்லுவார்கள்; அதையெல்லாம் கோர்ட்டில் சொல்லி விட்டால் பிறகு வக்கீலுக்கும் கட்சிக் காரனுக்கும் பேச்சே நடக்காது" என்ருர் ராமச்சந்திர ராயர்.

"நல்ல காரியம் செய்தீர், வீரராகவய்யங்கார் வாள்!" என்ருர் மாதவ ராயர், பட்டாசுக் கட்டைப் பற்றிக் கண்ணன் ஒப்புக் கொண்டிருந்தால் அவனுக்குத் தூக்குத் தண்டனையே கிடைத்திருக்கும். அநியாயமாக நிரபராதி உயிர் இழந்திருப்பான்" என்ருர்.

"பார்த்தீர்களா? என்னை எல்லாரும் வேடிக்கை செய்தீர்களே? அந்தப் பட்டாசுக் கட்டுதான் என்று நான் சொன்னது உண்மையாச்சா, இல்லையா?" என்றார் ராமசந்திர ராயர்.

⁂ ⁂ ⁂

"பெரிய வீட்டிலே வேலைக்கு இருப்பதே அபாய முங்கோ" என்றாள் குஞ்சம்மா.

"என்ன அபாயம்? வேலை பொல்லாததாக இருந்தால் எல்லாம் அபாயம்தான்" என்றாள் சீதம்மா.

"காலுக்கும் கைக்கும் இந்தக் காலத்தில் ஏதும் போடலாகாது அம்மா" என்றாள் வேலைக்காரி. அவ்வாறு சொல்லி விட்டுச் சீதம்மாவின் குழந் தையை எடுத்து முத்தம் கொடுத்தாள். பிறகு, "நான் போகிறேனம்மா! வீட்டைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சீதம்மாவிடம் சொல்லி விட்டுக் குஞ்சம்மா தன் வீட்டுக்குப் போனாள்.

⁂ ⁂ ⁂

குஞ்சம்மா சொன்னது ரொம்ப உண்மை. பெரிய வீடுகளில் ஏழைகள் வேலைக்கு இருப்பது ரொம்ப அபாயம். சிறு காரணங்களுக்கெல்லாம் வேலைக்காரர்கள் மீது சந்தேகப்படுவார்கள். அபா யம் என்று வேலைக்குப் போகாதிருந்தால் ஜீவ னத்துக்கு வழியில்லை, ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும்!

# வண்ணான் சின்னசாமி

*மனிதனுடைய உள்ளம் ஒரு விசித்திரம். அது வளர்வதும் மாறுவதும் ஆண்டவனின் விளையாட்டு. அடுப்புக் கரியும் பளபள வென்று மின்னும் வைரக்கல்லும் ஒரே பொருள் என்று ரசாயன பண்டிதர்கள் சொல்லுவார்கள். அதன் அணு அமைப்புக் கொஞ்சம் மாறிவிட்டால் வேறு பொருளாகி விடுகிறது. பொருளே மாறும் பொழுது ஒரு மனிதனுடைய குணங்கள் மாறுவதில் என்ன வியப்பு?*

பாரதியார் எழுதிய பாடல்களில் சிலவற்றை அவரே கிழித்தெறிந்து விட்டதுண்டு. ஜனங்களுக்குப் பயன்படாது என்றோ அல்லது அழகாய் அமைய வில்லையென்றோ எண்ணி, சில நல்ல பாட்டுக்களையும் கிழித்து விடுவார். இது நமக்குப் பெரிய நஷ்டம். இப்போது அதைப் பற்றி வருந்திப் பயனில்லை. போனது போனதுதான்.

ஒரு சமயம் "கண்ணன் ஒரு திருடன்" என்று ஓர் அழகான பாட்டுப் பாடினார். பக்கத்து வீட்டுச் சாமிநாத பிள்ளையின் மகன் சுந்தரம் என்கிற குழந்தையைப் பற்றி, பாரதியாரின் மனைவியார்

அடிக்கடி வருத்தப்பட்டுப் பேசுவதுண்டு. அந்தப் பையன் தவமிருந்து பெற்ற குழந்தை. நல்ல புத்திசாலி. ஆனால் பையனுக்குக் கொஞ்சம் திருட்டுப் புத்தி. இதைப் பற்றித் தகப்பனரிடம் சொல்லித் திருத்தப் பார்க்கலாமா என்று பாரதியாரும் மனைவி யும் யோசிப்பார்கள். சாமிநாத பிள்ளை கொஞ்சம் கடுமையாகப் பேசுவார். ஆனால் மிக நல்லவர். மகன் விஷயம் அவருக்குச் சொன்னால் மனம் புண்பட்டு மிகவும் கஷ்டப் படுவார். 'சொல்லாமலிருப்பதே நலம்; ஆண்டவன் விளையாட்டு' என்று பாரதியாரும் அவர் மனைவியாரும் முடிவு செய்து விடுவார்கள்.

இதைப் பற்றிப் பேசும் போது ஒரு நாள் பாரதி யாரின் ஆவேசம் ஏறித் துள்ளி, "கண்ணன் ஒரு திருடன்" என்னும் பாட்டைப் பாடினார். குழந்தை யாக வெண்ணெயைத் திருடியதும், குள்ளனாய் மண்ணைத் திருடியதும், கம்பத்துள் புகுந்திருந்து இரணியனைக் கிழித்ததும், மரத்தின் பின் ஒளிந்து நின்று வாலியைக் கொன்றதும், இப்படி எல்லா பகவத் கிரீடைகளும் அதில் அமைந்திருந்தன. மனைவி கேட்டதன் பேரில் பாட்டை எழுதியும் தந்தார். பிறகு ஏனோ ஒரு நாள் பாட்டைக் கிழித்துப் போட்டார்.

[இது கதை: உண்மையான பாரதியார் சரித்திரமல்ல.]

சிறு குழந்தைகளுக்குள்ள ஆசைகளைச் சரியான முறையில் திருத்திப் பூரணமடையச் செய்வது பெற்றோர்களின் வேலை. ஆனால் இந்தக் கடமையைச்

செய்யும் திறமை சரியானபடி அடைவதற்கு முன்ன மேயே குழந்தைகளை அவசரம் அவசரமாகப் பெற்று விடுகிறோம். குழந்தைகளோ தங்களைப் பெற்றவர்கள் அனுபவமும் அறிவும் அடைவதற்காக வளராமல் காத்திருப்பதில்லை. அவசரமாக வளர்ந்துகொண்டே போகிறார்கள்.

இயற்கை ஆசைகளே உயிர் அமைப்பின் வேக மூலம். தேகமும் உள்ளமும் வளர்ந்து முதிர்வ தெல்லாம் ஆசை வேகங்களின் வேலைதான். பிரகிருதி அமைப்பு இது. ஆசை இல்லாமற் போனால் வளர்ச்சி யில்லை. வளர்ச்சி இல்லாமற் போனால் உயிர் நோய் வாய்ப்படும். ஆனபடியால் ஆசை வேகங்களுக்குச் செல்ல வழிகள் சரியாக வகுத்துக் கொடுக்க வேண்டும். அப்படிச் செய்யாமல் போனால் பத்தில் மூன்று வீதம் வேகங்கள் கோணல் மார்க்கங்களில் சென்று விடும். அதுதான் குடும்பங்களின் துக்கங் களுக்குக் காரணம். இந்த அபாயத்தைக் கவனிப்பது பெற்றோர்களின் கடமை. இதைவிடச் சிறந்த தேசத் தொண்டோ சமூக சேவையோ வேறு இல்லை. குடும்பங்களின் தொகுதியே தேசம் சமூகம் எல்லாம்.

❋ ❋ ❋

வக்கீல் வசந்தய்யர் மகன் ரகு மிகவும் சுறுசுறுப் பான பையன். புத்தி சாமர்த்தியம், அழகு எல்லாம் படைத்தவன். இந்த நல்ல பையனுக்கு ஒன்பதாவது வயதிலிருந்து ஒரு கெட்ட வழக்கம். எங்கேயாவது நல்ல பேனாக்கத்தி பார்த்தால் அதை யாருக்கும்

தெரியாமல் மெள்ள மடியில் எடுத்துச் செருகிக் கொண்டு, பிறகு மறைத்து வைத்து விடுவான். யாராவது வீட்டுக்கு விருந்தாளி வந்தால் அவர்கள் பணப்பை காணுமற் போகும். வீட்டில் உள்ள வேலைக்காரர்கள் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போகப்படுவார்கள். "இவன்தான் எடுத்திருக்க வேண்டும்; ஆனல் ருசு இல்லை" என்று ஓர் அப்பாவி வேலைக்காரன் மேல் பழி சுமத்தப்படும். ரகு. பரீட்சையில் தன் பள்ளிக்கூடத்தில் முதலாகத் தேறி வந்தான். உபாத்தியாயர்களுக்கு இவன்மேல் மிகப் பிரியம். வகுப்புக்கு மேல் வகுப்பாக ஏறிச் சென்று சென்னைப்பட்டினமும் போய்ப் படித்து முடிவில் பி. எல். பரீட்சை தேறிவிட்டு இருபத்தோரு வயதில் வக்கீல் தொழிலில் அமர்ந்து விட்டான்.

ஆரம்பத்தில்; "நார்ட்டன்" சங்கரய்யருக்கு ஜூனியராக ரகுராம அய்யர் வக்கீல் தொழில் செய்து வந்தார்.

ஒரு நாள் மதுரையிலிருந்து திருச்சி ரயிலில் போய்க் கொண்டிருந்தார். இரண்டாம் வகுப்பு வண்டியில் இவர்கூடப் பிரயாணம செய்த திருநெல் வேலி ஜில்லா முன்சீப் கிருஷ்ணய்யர் எதிர் பெஞ்சில் சொக்காயை எடுத்து விட்டுப் படுத்து அரைத் தூக்கம் தூங்கிக் கொண்டிருந்தார். பகல் பிரயாணம் தான். ஆனாலும் ரயில் வண்டி ஆட்டத்தில், முக்கிய மாக வயதானவர்களுக்கு, தூக்கம் வரும்.

கிருஷ்ணய்யருடைய ஜிப்பா, மெல்லிய மில் துணி, கொக்கியில் மாட்டியிருந்தது. காற்றில் கொஞ்

சம் ஆடிக் கொண்டிருந்தது. ஜோபியில் கறுப்புத் தோல்பணப்பை வைத்திருந்தது நன்ருகத்தெரிந்தது. அதைப் பார்க்காதவர் போல் ரகுராம அய்யர் அசே கவனமாக இருந்தார். ஜன்மாந்தர கர்ம பலன் என்பார்கள். பழவினை என்று மாணிக்கவாசகர் அடிக்கடி பாடியிருப்பதும் இதுவே. கிருஷ்ணய்யர் தண்ணீர் அறைக்குள் போனர். கதவு மூடினதும் சட்டென்று வக்கீல் ரகுராம அய்யர் எழுந்து கிருஷ்ணய்யரின் ஜிப்பாவை எடுத்து ஜோபியிலிருந்த பையைத் திறந்து அதிலிருந்த நூறு ரூபாய் நோட்டை மட்டும் எடுத்துக்கொண்டு சொக்காயை யும் காலிப் பணப் பையையும் ஜன்னல் வழியாக எறிந்து விட்டுத் தம் இடத்தில் உட்கார்ந்தார். பிறகு படுக்கையை விரித்து அதன் மேல் படுத்தவ ராகத் தம் பணப் பையைத் திறந்து அதற்குள் நோட்டை மடித்து வைத்துத் தலையணைக்குக் கீழ் பத்திரமாகச் செருகி விட்டுத் தூங்குவதுபோல் கண் மூடிக் கொண்டார். எல்லாம் அரை நிமிஷ வேலை. கொஞ்சம் நேரம் கழித்துக் கிருஷ்ணய்யர் தண்ணீர் அறையிலிருந்து திரும்பி வந்தார். தம் ஜிப்பாவை இங்கும் அங்கும் தேடினர்.

“என்ன இது, ஆச்சரியம்!” என்று ரகுராம அய்யரை எழுப்பினர்.

“கீழே விழுந்து போயிருக்கும்; நன்ருகப் பாருங் கள்” என்ருர் ரகுராம அய்யர். கண்களைத் துடைத்துக் கொண்டு கொட்டாவியும் விட்டார்.

"எல்லாம் பார்த்தேன்; எங்கும் இல்லை. யாரோ எடுத்துவிட்டார்கள். நான் உள்ளே இருந்தபோது வண்டி எந்த ஸ்டேஷனிலாவது நின்று, நீர் வெளியே போனீரோ?" என்று அலறினார், முன்சீபு கிருஷ்ணய்யர்.

"வண்டியை விட்டு நான் இறங்கவுமில்லை. வண்டி நிற்கவும் இல்லை, இன்னும் ஒரு ஸ்டேஷனும் வர வில்லை. ஒரு வேளை காற்றில் ஜன்னல் வழியாக விழுந்து போயிருக்கலாம். கோட்டா? ஜிப்பாவா?" என்று நிதானமாகக் கேட்டார் ரகுராமய்யர்.

"ஜிப்பாதான். வெள்ளை ஜிப்பா. ஜோபியில் பணப்பை இருந்தது" என்றார் கிருஷ்ணய்யர்.

அவருக்கு ரகுராம அய்யர் மேல் சந்தேகம். ஆனால் அவருடன் வண்டி ஏறும்போது பேசினதில் அவர் திருச்சி வசந்த அய்யர் குமாரர், பிரபல வக்கீல், நார்ட்டன் சங்கர அய்யரிடம் ஜூனியர் என்றெல் லாம் தெரிந்து கொண்டிருந்தார். எப்படி அவர் பணத்தை எடுத்திருக்கக் கூடும் என்று, உதித்த சந்தேகத்தை நீக்கிக் கொண்டார்.

"எவ்வளவு வைத்திருந்தீர் பணப்பையில்?" என்று பேச்சைத் தொடர்ந்தார் ரகுராம அய்யர்.

"நூறு ரூபாய் நோட்டு வைத்திருந்தேன்" என்றார் கிருஷ்ணய்யர்.

"அடாடா! நம்பர் எழுதி வைத்திருக்கிறீரா?" என்று கேட்டார் ரகுராமய்யர்.

"எப்போதும் எழுதி வைப்பது வழக்கம். இந்தத் தடவைதான் எழுதவில்லை."

ரகுராமய்யரின் உள்ளத்தில் அப்பொழுது ஏற்பட்ட மகிழ்ச்சியை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.

"எப்போதும் நம்பர் குறித்து வைத்துக்கொள்ள வேண்டும்" என்று சொல்லித் தினசரிப் பத்திரிகையைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தார்.

கொஞ்சநேரத்திற்குப் பிறகு, "ஜன்னல் வழியாக விழுந்திருந்தாலும், விழுந்திருக்கலாம். அடுத்த ஸ்டேஷனில் சொன்னல் ஒரு வேளை கிடைக்கலாம்" என்று யோசனை சொன்னர்.

அடுத்த ஸ்டேஷன் வந்ததும் ரகுராமய்யரே போலீஸ்ஸ்டேஷனுக்குப் போய் எல்லா விஷயங்களையும் சொல்லி, ரயில் பாதையில் தேடுவதற்கு ஏற்பாடு செய்தார். போகும்போது மெதுவாகத் தாம் எடுத்த நோட்டின் நம்பரைப் பார்த்துத் தம்முடைய டைரியில் குறித்து வைத்துக் கொண்டார்.

இரண்டு நாள் கழித்து ஜிப்பாவும் பணப்பையும் இருப்புப் பாதையில் கிடந்து எடுக்கப் பட்டதாகக் கிருஷ்ணய்யருக்குத் தெரிவிக்கப்பட்டது. ஆனல் நோட்டுச் சமாசாரம் மட்டும் இல்லை.

"ரயில் காங்கிக் கூலிகள் எமகாதகர்கள். நோட்டை மட்டும் எடுத்துக்கொண்டு, துணியும், பையும் மட்டும் அகப்பட்டதாகக் கொடுத்திருக்கிருர்கள்" என்ருர் ஸ்டேஷன் மாஸ்டர்.

"பையில் நோட்டு இருந்தது என்பது என்ன நிச்சயம்? வண்டியில் ஏறும்போதே இழந்து விட்டிருக்கலாம்" என்ருர் சப் இன்ஸ்பெக்டர் சவுரிராஜன்.

இவ்வாறெல்லாம் பேசினார்களே யொழிய வக்கீல் ரகுராமய்யர் பேரில் சந்தேகம் கிளம்ப வில்லை. கிருஷ்ணய்யர் மனைவிக்கு மட்டும் கொஞ்சம் சந்தேகம் உண்டு.

"கூட யாரோ வக்கீல், சிறு பையன் இருந்தான் என்கிறீர்களே; அவன்தான் நோட்டை எடுத்துக் கொண்டு சொக்காயை வெளியே போட்டிருக்க வேண்டும். சிலர் பிறப்பிலேயே திருட்டு" என்றாள்.

* * *

ஆறு வருஷங்களுக்குப்பின் ஒரு நாள். ரகுராம அய்யர் இப்போது பிரபல கவர்ன்மெண்டு வக்கீல்.

"சாமி, நீங்கள் வெளுக்கப் போட்ட ஷர்ட்டிலே பணம் வைத்திருந்தீர்களே, இந்தாங்கோ, பார்க்காமல் போட்டு விட்டீங்களே" என்றான் வண்ணான் சின்னசாமி. கசங்கிப்போன பத்து ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்தான்.

"அடே ஆமாண்டா, நேற்றுக் குளிக்கப் போகச்சே, குப்பாண்டி செட்டியார் படிச் செலவுக் கென்று கொடுத்தார். அவசரமாக ஷர்ட் ஜோபியில் வைத்துக்கொண்டு ஸ்நானம் செய்யப் போனேன். வெந்நீர் அறையில் அழுக்கை அவிழ்த்து வைத்து விட்டு வந்தேன். கோர்ட்டுக்குப் போகும் அவசரம். மறந்தே போனேன். நீ யோக்கியமான பையன் சின்னசாமி! வேறே யாராயிருந்தாலும் ரூபாயைக் கொடுத்திருக்க மாட்டார்கள்" என்றார் ரகு ராமய்யர்.

"பாடுபட்டுச் சம்பாதிக்கலாம். இன்னொருவர் சொத்து நமக்கு என்னத்துக்குங்க, சாமி! திருட்டுச் சொத்து நிக்குமா?" என்ருன் சின்னசாமி.

அன்றிரவு பார்த்தசாரதி கோயிலுக்கு வழக்கம் போல் தம் தாயாரைச் சுவாமி தரிசனத்துக்கு அழைத்துக் கொண்டு போனர். அன்றும் விசேஷ நாள். கோயிலில் பெருங் கூட்டம். ரகுராமய்யரும் மற்றவர்களுடன், தரையில் விழுந்து நமஸ்காரம் செய்தார். கும்பிட்ட மற்றவர்கள் எழுந்து நின்றபோது, ரகுராம அய்யர் மட்டும் நீட்டிக் கிடந்தவர் அப்படியே பகவானைத் தியானம் செய்து கொண்டு ஒரு நிமிஷம் கிடந்தார். இதைக் கண்டு அவர் தாயார் கிழவிக்கு வெகு திருப்தியாயிற்று. தன் தாடையைப் பல தடவை தட்டிக் கொண்டு மகிழ்ச்சியடைந்தாள். தான் பெற்ற மகனைக் குருவாகவே எண்ணிச் சந்தோஷப்பட்டாள்.

* * *

கவர்ன்மெண்டு வக்கீல் ரகுராம அய்யர் ஒவ்வொரு மார்கழியும் திருவெம்பாவை விழா பிரமாதமாக நடத்தி வைக்கிருர். பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கெல்லாம் பட்டாசு, மிட்டாய் வாங்கி விநியோகம் செய்கிருர். ஸ்ரீராம நவமியும் வெகு விமரிசையாக நடத்துகிருர். பாசாங்கு அல்ல. உண்மையில் பக்தி நிறைந்தவராக மாறிவிட்டார். மனிதனுடைய உள்ளம் ஒரு விசித்திரம். அது வளர்வதும் மாறுவதும் ஆண்டவனின் விளையாட்டு அடுப்புக் கரியும் பளபளவென்று மின்னும் வைரக்

கல்லும் ஒரே பொருள் என்று ரசாயன பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். ஒரே பொருள் அதன் அணு அமைப்புக் கொஞ்சம் மாறிவிட்டால் வேறு பொருளாகி விடுகிறது. பொருளே மாறும் பொழுது ஒரு மனிதனுடைய குணங்கள் மாறுவதில் என்ன வியப்பு? அத்தனின் அருள் இருப்பின் ஏதும் முடியும்.

"செம்மை நலமறியாத
    சிடரொடுந் திரிவேனை,
மும்மைமல மறுவித்து
    முதலாய முதல்வன்தான்,
நம்மையுமோர் பொருளாக்கி
    நாய்ச்சிவிகை ஏற்றுவித்தான்,
அம்ம! எனக்கருளியவாறு
    யார்பெறுவா ரச்சோவே!"

என்று ரகுராம அய்யர் காலையில் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து பாடுவது வழக்கம். பாடும் பொழுது கண்களிலிருந்து வடியும் நீரைத் துடைத்துக்கொண்டு கட்டிலிலிருந்து இறங்குவார்.



